# அறநெறி விளக்கம்

27-1

கதிர்—௩


சென்னைப் பச்சையப்பன் கல்லூரித் தமிழாசிரியர்

**மணி. திருநாவுக்கரசு முதலியார்**

எழுதியது




—


கே. பழனியாண்டிப் பிள்ளை கம்பெனி,

திருவல்லிக்கேணி, சென்னை.




[அணா 7

**Approved by the Text-Book Committee**

*Vide Fort St. George Gazette, Page 227,*

*Dated 19th April, 1927.*

# புறவுரை

27-1

இந்த சமயத்துக்கு இன்றியமையாத பொது ஒழுக்கங்களையும் அச்சமய சாத்திரப் பருப்பொருட்களையும், அதன் பத்ததிகளையும், அதன் பரிமளம் வீசும் அறம் பொருள் இன்பக் கூறுபாடுகளையும் ஒரு முறைப்படுத்தி இளைஞருக்குச்சமயசாத்திர உணர்ச்சியைச் சிறிது சிறிதாகத் தோற்றுவிக்கும் பொருட்டு, 'அறநெறி விளக்கம்' எனப் பெயர் வாய்ந்த இந்நூல் வரிசை வெளிவருதலாயிற்று. இது வைதிக தருமம், ஸ்மிருதி ஆசாரம், புராணக்கதை, ஆகமபத்ததி, இதிகாச சரித்திரம் முதலான பலவற்றையும் உட்கொண்டு திகழ்வதாகலின் இவையெல்லாம் ஒருங்கே தழுவுதற்கு இப்பெயர் இதற்குப் புனையப்பட்டது. சாத்திரம், தோத்திரம் என இருபாற்பட்ட திருப்பாடல்களும் இதன்கண் வேண்டிய அளவிற்குத் தரப்பட்டுள்ளன. அவை மாணவருக்குத் தமிழ்ச் சுவையையும் ஆர்வப் பெருக்கையும் அளிக்கும்என்பது திண்ணம். இந்நூல்கள் பள்ளிக் கழகங்களிலே அன்றிப் பொதுவாகவும் இருபாலரானும் முறையே கற்றுத்தேறுதற்கு ஏற்றவையாகும். 'பழையன கழிதல் புதுவன புகுதல்' என்னும் முறை இதில் ஓர்ப்புடன் ஆளப்பட்டுள்ளது. இவற்றை உலகம் ஏற்றுத் தமிழ்த்தொண்டு புரியும் என்னை ஊக்குவதாக அவன்அழகியஅருளை இறைஞ்சுகின்றேன்.

இங்ஙனம்,

**மணி. திருநாவுக்கரசன்.**

27-1

# உள்ளுறை

---

## உரை

## பாட்டு

ஓம்

கடவுள் துணை

# அறநெறி விளக்கம்

கதிர் ௩

## 1 கடவுள் இயல்

நாம் வாழும் இவ்வுலகத்தைக் கொண்டு தான் கடவுள் ஒருவர் உண்டு என்பதை நாம் அறிய வேண்டும். உலகம் என்பது மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்னும் ஐம்பெரும் பூதங்களின் சேர்க்கையாகக் காணப்படுகிறது. இவ்வைந்து பூதங்களில் ஒன்றும் அறிவுடைய தன்று. ஆதலால் இவைகள் ஒன்றோடொன்று சேர மாட்டா. இவைகளைச் சேர்ப்பதற்கு ஒரு முதற் கடவுள் இருக்க வேண்டும். அன்றியும் இவ்வுலகம் ஒரு காலத்திலே தோன்றி ஒரு காலத் திலே நிலைபெற்று ஒரு காலத்திலே அழிகின் றது. இம்மூன்று தொழிலையும் நாம் இவ்வுல கத்தினிடத்திற் காண்கின்றோம். இத்தொழில் கட்குக் காரணமான கடவுள் ஒருவர் இருக்க

வேண்டும் என்று நாம் துணியலாம். ஒரு குடத்தைப் பார்த்த ஒருவன் அதைச் செய்த குயவன் ஒருவன் உண்டு என்று எப்படி உணர்வானோ அது போலவே இவ் வுலகத்தைப் பார்த்து, இதற்கு முதற்கடவுள் ஒருவர் உண்டென்று நாம் தெளிவாக அறிந்துகொள்ளலாம்.

இன்னும் இவ்வுலகம் ஒழுங்காக நடக்கின்ற முறையைப் பார்த்தாலும் கடவுள் ஒருவர் உண்டு என்பது நமக்குப் புலப்படும். சூரியன் காலந்தவருது தோன்றி நமக்கு ஒளியைத் தருகின்றான். சந்திரன், செவ்வாய், புதன், குரு, வெள்ளி, சனி முதலிய கோள்களும் ஒரு முறையாகத் தோன்றி நின்று மறைகின்றன. கிரஹணங்கள் காலந் தவருது காணப்படுகின்றன. ஆதலால் இத்தகைய ஒழுங்குக்குக் காரணமான முதற்கடவுள் ஒருவர் உண்டு என்று நாம் உணரல் வேண்டும்.

மேலும் நம் முன்னோர்கள் கடவுளுடைய ஆற்றலைப் பெற்று, மக்கள் செய்வதற் கரிய செய்கைகளைச் செய்து காட்டி இருக்கிறார்கள். அவர்கள் கடவுளுடைய அருளை அறிந்து நுகர்ந்து அந்த அனுபவங்களை வெளியிட்டிருக்கிறார்கள். அவர்கள் கடவுளை நேரிற் கண்ட காட்சியைத் தமது திருப்பாடல்களில் அருளிச் செய்திருக்கிறார்கள். அவர்கள் நம் மேல் அருள் வைத்துத்தான் அப்பாடல்களை யெல்லாம் பாடி

வைத்தார்கள். அவற்றைக் கொண்டும் நாம் முழு முதற்கடவுள் ஒருவர் உண்டென்பதை உணர்ந்து கொள்ளலாம்.

அல்லாமலும் வேதம், ஆகமம், புராணம், இதிகாசம் முதலான எல்லா நூல்களிலும் கடவுள் உண்டு என்று நன்கு விளக்கப்பட்டிருக்கிறது. அவ்வுண்மையையும் நாம் நம்பவேண்டும்.

கடவுளை நாம் நம்முடைய கண்களால் பார்க்க முடியாது; ஆனாலும் அறிவாகிய கண்ணால் அவரைப் பார்க்கலாம். அப்படித்தான் நம் முன்னோர்களாகிய பெரியோர்கள் பார்த்தார்கள். கடவுள் இவ்வுலகத்தைப் படைத்துக் காத்து அழித்து வருகிறார். அவர் உயிர்களாகிய நம்மிடத்திலே பேரருள் உடையவர். அவர் பேராற்றலும் பேரறிவும் உடையவர்; எங்கும் நிறைந்தவர். அவருக்கு இன்பமே வடிவம். அவர் உலகத்திலே நாம் பார்க்கும் எல்லாப் பேரழகுகளுக்கும் மேற்பட்ட பேரழகு உடையவர்; எல்லாப் பேரறிவைக் காட்டிலும் மேலான பேரறிவுடையவர். அவர் நினைத்த மாத்திரத்தில் இவ்வுலகம் உண்டாகிவிடும்; நினைத்த மாத்திரத்தில் உலகம் அழிந்துவிடும். அவர் நினைத்தால் ஆகாத காரியம் இல்லை. அவர் அணுவை மலையாக்குவார்; மலையை அணுவாக்குவார்.

கடவுளுக்கு உருவம் இல்லை. ஆனாலும் ஆகாயமே அவருக்குத் திருமேனி; மலைகளே திருத்தோள்கள். அன்றியும் கடவுள் தம்மை அன்போடு வணங்கும் அடியவர் பொருட்டு அருளாகிய திருமேனியை எடுத்துவந்து அவர்கட்கு அருள்செய்வார். உலகத்திலே உள்ள எல்லா வடிவமும் அவர் வடிவுகளே; எல்லா உருவமும் அவர் உருவங்களே. அவருக்கு ஒரு திருநாமமும் இல்லை; ஆனாலும் நாம் அவரை நமக்கு விருப்பமான ஆயிரம் திருநாமங்களை இட்டும் அழைக்கலாம். கடவுளுக்கு முகம், கை, கால் முதலான உறுப்புக்கள் இல்லை; ஆனாலும் அவருக்கு முகம் ஆயிரம், கைகள் ஆயிரம், கால்கள் ஆயிரம் என்று சிறப்பித்தும் சொல்லலாம். திருக்கோயில்களிலே இருப்பவை அவருடைய அடையாளங்களே ஆகும். அங்கும் அவர் தோன்றி அன்பருக்கு அருள் செய்வார்.

கடவுள் இல்லாவிட்டால் உலகம் நடவாது. இராப் பகல் உண்டாக மாட்டா; நமது கண் ஒன்றையும் பார்க்காது; நமது செவி ஒன்றையும் கேட்காது; நமது கை ஒன்றையும் செய்யாது. கடவுள் நம்மை ஒரு சூத்திரதாரியைப் போல ஆட்டிவைக்கிறார். சூத்திரதாரி எப்படி பின்னே மறைந்துநின்று பொம்மையை ஆட்டுகின்றானோ அது போலவே இறைவர் பின்னே இருந்து

நம்மை ஆட்டுகின்ருர் ; நமக்கு எல்லாப் போகங் களையும் ஊட்டுகின்றவரும் அவரே.

கடவுள் நம் உயிருக்கு உயிராய் இருக்கிருர் ; கண்ணுள் ஒளியாய் இருக்கிருர் ; செவியுள் ஓசையாய் இருக்கிருர். அவரே பாட்டிலே இசையாய் இருக்கிருர் ; அவரே பழத்தில் சுவையாய் இருக்கிருர். அவரே நீருக்குக் குளிர்ச்சியைத் தந்தவர் ; அவரே நெருப்புக்கு வெம்மையைச் செய்தவர் ; அவரே காற்றை இயக்குகின்றவர். அவர் பெருமையை நாம் அளவிட்டுக் கூறமுடியாது. அவர் பெரிய பொருள்கள் எல்லாவற்றிலும் பெரியவர் ; சிறிய பொருள்கள் எல்லாவற்றிலும் சிறியவர். அவரை வாழ்த்துவதற்கு நமது ஒரு வாய் போதாது ; வணங்குவதற்கு ஒரு தலை போதாது.

நம்மால் கடவுளுக்கு ஆக வேண்டியது ஒன்றும் இல்லை. ஆனல் நமக்கு அவரை இன்றி முடியாது. நாம் கடவுளை வாழ்த்துவது நம் பொருட்டேயன்றி அவர் பொருட்டன்று. அவர் நமக்கு அருள் சுரந்து செய்த நன்மைகளைக் குறித்து அவரை நாம் வாழ்த்த விரும்புகின்ருேம். நாம் கடவுளை உள்ளன்போடு வாழ்த்தும்போதெல்லாம் பேரின்பம் அடைகின்ருேம். நமக்கு நன்மை செய்கிற தாய், தந்தை, குரு, பெரியோர் முதலானவர்களை நாம் புகழ்வதனுல் அவர்களுக்கு ஆகவேண்டியது ஒன்றும் இல்லை. ஆனல் அப்

படிச் செய்வதனுல் நாம் இன்பத்தை அடைகின்ருேம். நமது நன்றி அறிவை அவர்கட்குக் காட்டுகின்ருேம். அது நமது கடமையே அன்றி வேறில்லே. அதுபோலவே நாம் கடவுளே வாழ்த்துவதனுல் நமக்கு நன்மையே தவிர, அவருக்கு ஒரு பயனு மில்லே.

கடவுளே நம்புகின்றவர் உண்மையும் ஒழுக்கமும் அன்பும் உடையவராக இருத்தல் வேண்டும். உண்மை இல்லாத பொய்யர் செய்கின்ற வாழ்த்தும் வணக்கமும் பூசையும் கடவுள் ஏற்றுக்கொள்ள மாட்டார். அவர்கள் பொய் யொழுக்கத்தை அவர் முற்றும் வெறுப்பார். பொய் வேடத்தாரையும் நடிப்புள்ளவர்களேயும் போலி அடியார்களேயும் அவர் விரும்பவே விரும்பார். எல்லா மக்களேயும் எல்லா உயிர்களேயும் தம்மைப் போலவே எவ்வகையான வேற்றுமையும் பாராட்டாமல் அன்பு செய்யும் நல்லோரே இறைவனுக்கு மிக உவந்த தொண்டர்கள்; அவருடைய பேரின்பமாகிய பெருஞ் செல்வத்திற்கு உரிய நல்ல பிள்ளேகள். நாம் கடவுளே நெஞ்சாரச் சிந்தித்து வாயார வாழ்த்தித் தலேயாரக் கும்பிட்டு வணங்குவோமாக.

பாட்டு

முடிசார்ந்த மன்னரும் மற்றுமுள் ளோரும் முடிவிலொரு
பிடிசாம்ப ராய்வெந்து மண்ணுவ துங்கண்டு பின்னும்இந்தப்
படிசார்ந்த வாழ்வை நினேப்பதல் லாற்பொன்னின் அம்பலவர்
அடிசார்ந்து நாம்உய்ய வேண்டுமென் றேஅறி வார்இல்லேயே. (க)

நன்ஞரிற் பூட்டிய சூத்திரப் பாவைநன் ஞர்தப்பினுல்
தன்னுலும்ஆடிச் சலித்திடுமோஅந்தத் தன்மையைப்போல்
உன்னுலி யானுந் திரிவதல் லால்மற் றுனைப்பிரிந்தால்
என்னுலிங் காவதுண் டோஇறை வாகச்சி ஏகம்பனே. (உ)

தெய்வச் சிதம்பர தேவாஉன் சித்தந் திரும்பிவிட்டால்
பொய்வைத்த சொப்பன மாமன்னர் வாழ்வும் புவியும்எங்கே
மெய்வைத்த செல்வம்எங் கேமண்ட லீகர்தம் மேடைஎங்கே
கைவைத்த நாடக சாலைஎங் கேஇது கண்மயக்கே. (ந)

பொன்ஞற்ப்ர யோசனம் பொன்படைத் தார்க்குண்டப் பொன்
[படைத்தோன்
தன்ஞற்ப்ர யோசனம் பொன்னுக்கங் கேதுண்டத் தன்மையைப்
[போல்
உன்ஞற்ப்ர யோசனம் வேணதெல் லாம்உண் டுனைப்பணியும்
என்ஞற்ப்ர யோசனம் ஏதுண்டு காளத்தி ஈச்சுரனே. (ச)

கையொன்று செய்ய விழியொன்று நாடக் கருத்தொன்றெண்ணப்
பொய்யென்று வஞ்சக நாவொன்று பேசப் புலால்கமழும்
மெய்யொன்று சாரச் செவியொன்று கேட்கவிரும்புமியான்
செய்கின்ற பூசை எவ்வாறு கொள்வாய் வினைதீர்த்தவனே. (ரு)

ஊட்டுவிப் பானும் உறங்குவிப் பானும்இங் கொன்ருேடொன்றை
மூட்டுவிப் பானும் முயங்குவிப் பானும் முயன்றவினை
காட்டுவிப் பானும் இருவினைப் பாசக் கயிற்றின்வழி
ஆட்டுவிப் பானும் ஒருவன்உண் டேதில்லை அம்பலத்தே. (சு)

ஒன்றென் றிருதெய்வம் உண்டென் றிருஉயர் செல்வம் எல்லாம்
அன்றென் றிருபசித் தோர்முகம் பார்நல் அறமும்நட்பும்
நன்றென் றிருநடு நீங்கா மலேநமக் கிட்டபடி
என்றென் றிருமன மேஉனக் கேஉப தேசம்இதே. (எ)

பட்டினத்துப் பிள்ளையார்.

## 2. சந்திரசேகரர்

சிவபெருமானுக்குப் பல திருநாமங்கள் உண்டு. அவையெல்லாம் அவருக்கு ஒவ்வொரு காரணம் பற்றியே உண்டானவை. சிவம் என்னும் சொல்லுக்கு மங்களம் என்று பொருள். அதனால் சிவன் என்றால் மங்களத்தை உடையவர் என்று ஏற்படும். இது போன்றே உயிர்களுக்கு இன்பத்தைச் செய்தலின் அவருக்குச் சம்பு, சங்கரன் என்னும் திருநாமங்களும், தம்மை அடைந்தவர்களுடைய பாவத்தை ஒழித்தலின் ஹரன் என்ற திருநாமமும் உண்டாயின. அவருக்குச் சந்திரசேகரர் என்னும் அருமைத் திருநாமமும் ஒன்றுண்டு. முன்னர் நீங்கள் சிவபெருமானுக்கு உள்ள சில திருநாமங்களின் காரணத்தை அறிந்துகொண்டீர்கள். இப்போது சந்திர சேகரர் என்னும் திருநாமத்தின் காரணத்தை அறிந்து கொள்வீர்களாக.

சந்திரசேகரர் என்றால் சந்திரனைத் தரித்தவர் என்பது பொருள். அதனால் சிவபிரான் சந்திரனை எப்போது ஏன் தரித்துக்கொண்டார் என்பதைத் தெரிவிக்கிறேன் ஊக்கமாய்க் கேளுங்கள்: வெண்டாமரை மலரிலே வாழும் பிரம தேவன் புதல்வர்களுள் தக்ஷன் என்பவன் ஒருவன் இருந்தான். அவன் நக்ஷத்திர வடிவிலே தோன்றும் அசுவனி, பரணி, கார்த்திகை, முத

லான இருபத்தேழு புதல்வியரைப் பெற்ருன். இவர்கள் எல்லாரையும் அழகிற் சிறந்த ஆடவன் ஒருவனுக்கு மணஞ் செய்விக்க அவன் கருதினுன். அப்பொழுது அத்திரி என்னும் முனிவர் ஒருவர் இருந்தனர். அவர் மனைவி அநசூயை என்னும் மாதுசிரோமணி. அவர்கள் இருவருக்கும் சந்திரன் என்னும் மகன் பிறந்து வளர்ந்து காளைப் பருவம் அடைந்திருந்தான். அவனே அழகிலே ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவன்; குளிர்ந்த சொல்லை யுடையவன்; இனிய குணமுடையவன். இவ்வளவு சிறந்தவனுகச் சந்திரன் இருந்தபடியால், தக்ஷன் தன் அருமை மக்கள் இருபத்தெழுவரையும் அவனுக்கே மணஞ் செய்து கொடுத்தான். அப்படிச் செய்த அவன் சந்திரனை நோக்கி, "அன்புள்ள மருகனே, இப் பெண்கள் இருபத்தேழு பேரையும் ஒரே வகையாக நீ நடத்தல் வேண்டும்; ஒருவர்மேல் மிக்க அன்பும் மற்றெருருவர்மேல் குறைந்த அன்பும் வைத்தல் கூடாது," என்று கூறி அனுப்பினுன். சந்திரன் அவ்வாறே நடப்பதாக ஒப்புக்கொண்டு சென்ருன்.

சந்திரன் தன் மாமனுர் உரைத்தபடியே சில நாள் வரையில் தன் மனைவியர் அனைவரையும் ஓரமின்றி நடத்திவந்தான். ஆனுல் நாளேற நாளேற அவனுல் தன்னுடைய சொல்லின்படி நடக்க முடியவில்லை. ஏனென்ருல், அவன்

மனைவியருள் உரோகிணியும் கார்த்திகையும் கண்ணைக் கவரும் பேரழகு வாய்ந்தவர்கள். அதனால் அவர்கள் இருவரிடத்தும் மிக்க அன்பு வைத்து மற்ற மனைவியரைச் சிறிதும் நோக்கானாயினான். அப் பெண்களோ பன்னாள் பொறுத்திருந்து மனம் வெறுத்துத் தம் தந்தையாகிய தக்ஷனிடம் சென்று முறையிட்டுக் கொண்டனர். உடனே தக்ஷன் மருகனை வருவித்து அறிவு புகட்டி இனி அவ்வாறு நடக்கவேண்டாமென நயமாகக் கூறி விடுத்தான். சந்திரன் அங்ஙனமே செய்வதாகக் கூறி மீண்டும் பழையபடியே நடந்து வந்தான். மறுபடியும் அப்பெண்கள் தந்தையிடம் தமது குறையைக் கூறிக்கொண்டனர். அப்போது தக்ஷனுக்குக் கோபம் மூண்டது. உடனே அவன், "சந்திரன் தன் அழகினால் செருக்குக் கொண்டிருக்கிறான்; அதனால் நீதி தவறி நடப்பதும் அன்றி என் சொல்லையும் பொருட்படுத்தவில்லை. நல்லது; அவன் இறுமாப்பை அடக்குகின்றேன்," என்று எண்ணிச் "சந்திரன் ஒவ்வொரு நாளாக ஒவ்வொரு கலை குறைந்து இறக்கக் கடவன்," என்று ஒரு கொடிய சாபம் இட்டான்.

சந்திரன் சாபத்தின் பயனாக ஒவ்வொரு கலையாகப் பதினைந்து நாட்களிலே பதினைந்து கலைகளும் அழிந்து ஒரு கலையோடு நின்றான். அப்

போது அவனுக்குத் தான் இறந்துவிடுவான் என்னும் அச்சம் உண்டாகிவிட்டது. அதனுல் அவன் தேவேந்திரனிடம் சென்று தன்னைக் காப்பாற்ற வேண்டும் என்று வேண்டிக்கொண் டான். அவன் பிரமதேவரைக் கைகாட்டி விட்டு விட்டான். அப்பால் சந்திரன் பிரமதேவரிடம் சென்று குறையிரந்து வேண்டினுன். அவர், "சந்திர, நான் என் மகன் தக்ஷனுக்குச் சொல் லுதல் அழகன்று. நீ கைலாய மலைக்குச் சென்று சிவபெருமானை வேண்டிக்கொள்; அவர் உனது குறையைத் தீர்ப்பார்," என்று சொல்லி அனுப்பி ஞர்.

அதன்பின் சந்திரன் கயிலையை அடைந்து, சிவபெருமானைக் கண்டு, அடியற்ற பனைபோல விழுந்து வணங்கி வேண்டினுன். அவர் அவ னுடைய குறையைக் கேட்டு, மனம் இரங்கி, அவனுடைய ஒரு கலையைத் தம் சடையின்மேல் தரித்துக்கொண்டார். பிறகு அவர் சந்திரனை நோக்கி, "சந்திர, உன்னுடைய கலை என் சடை யின் மேல் இருத்தலால் அஃது ஒவ்வொரு நாளும் ஒவ்வொன்ருக வளர்ந்து நிறையும். ஆகி லும் தக்ஷன் சாபத்தால் பின்பு ஒவ்வொன்ருகத் தேயும். ஆனுல் எப்பொழுதும் ஒரு கலை மட்டும் உன்னைவிட்டு நீங்காது. உன் குற்றத்திற்குத் தண்டனையும் வேண்டும். தக்ஷன் சாபமும்

பொய்த்தலாகாது, எமது அருளையும் தந்தோம்," என்று அவனுக்கு அருள் செய்தார். இதனால் வளர் பிறையும் தேய் பிறையும் உண்டாயின. வளர் பிறைக்குப் பூர்வ பக்ஷம், சுக்கில பக்ஷம் என்றும், தேய் பிறைக்கு அபர பக்ஷம், கிருஷ்ண பக்ஷம் என்றும் வடமொழியில் பெயர்கள் வழங்குகின்றன. பூர்வம் என்பதற்கு முன் என்றும், அபரம் என்பதற்குப் பின் என்றும், சுக்கிலம் என்பதற்கு வெண்மை என்றும், கிருஷ்ணம் என்பதற்குக் கறுப்பு என்றும் பொருள்.

---

## 3. வராகாவதாரம்

காசிபர் என்னும் முனிவர் ஒருவர் இருந்தார். அவர் தவம், தியானம் முதலானவைகளைச் செய்த மிகப் பெரியவர். அவர் திதி என்னும் பெண்ணை மணந்து புதல்வர் இருவரைப் பெற்றார். அவர்களுள் மூத்தவன் பெயர் இரண்ணிய கசிபு, இளையவன் பெயர் இரண்ணியாட்சன்.

இவர்கள் இருவரும் முற்பிறப்பிலே வைகுந்த லோகத்திலே ஜயன், விஜயன் என்னும் பெயருடன் துவாரபாலகராய் இருந்துவந்தனர். அப்போது ஒருகாலத்தில் சனந்தர் முதலான முனிவர்கள் வைகுந்தம் சென்றனர். அவர்களைப் போகக் கூடாதென்று இவ்விருவரும் தடுத்து

திறுத்தினர். அதனுல் இவர்கள் பூமியில் பிறக்கும்படியான சாபத்தைப் பெற்றனர். பிறகு இவர்கள் விஷ்ணு மூர்த்தியை வேண்டிப் புலம்ப, அவர் இவர்களை நோக்கி, " நீங்கள் நம்மிடம் பகைத்து மூன்று பிறவியிலே வைகுந்தம் அடைய விரும்புகிறீர்களா ? அல்லது நம்முடன் அன்பு வைத்து ஏழு பிறவியிலே வைகுந்தம் அடைய விரும்புகிறீர்களா ?" எனக் கேட்க, இவர்கள், " பகைத்தேனும் விரைவில் வைகுந்தம் அடைய வேண்டும்," என்றனர். அவ்வாறே திருமால் இவர்கட்கு அருள் செய்தார்.

முதற் பிறப்பிலே இவ்விருவரும் இரண்ணிய கசிபு, இரண்ணியாட்சன் என்பவராய்ப் பிறந்து, மிகவும் மேன்மையான உடலுரம், மனத்திட்பம், வீரம் முதலியவற்ருற் சிறந்து விளங்கினர் ; பல அரிய தவங்களைச் செய்து பெரிய வரங்களைப் பெற்றனர். பிறகு இவர்கள் திக்விஜயஞ் செய்து எல்லாரையும் வென்று தமக்கு அடிமைப் படுத்தினர். இவர்களால் தேவர்களும் முனிவர்களும் பெரிதும் வருந்தி ஒடுங்கினர்.

இரண்ணியாட்சன் ஒருகாலத்தில் மிகவும் செருக்குற்றுக் கதாபாணியாய்ச் சென்று, இந்திரனைத் தாக்கி வருத்திஞன் ; இருடிகளைத் தெழித்தான். அன்றியும் அவன் பூமியைப் பாய்போலச் சுருட்டிக்கொண்டு பாதாளஞ் சென்று கடலிலே

போய் ஒளித்தான். அப்போது தேவர்களும், முனிவர்களும், மனிதர்களும் நடுநடுங்கினர். தேவர் பிரமதேவனிடம் முறையிட்டனர்; பிரமதேவர் திருமாலை வேண்டிக்கொண்டனர். அவர் வேண்டுகோளுக்கு இரங்கித் திருமால் பிரமதேவர் மூக்கிலே இருந்து பூமியைக் கிழித்துச் செல்லும் பன்றி உருவங் கொண்டு பூமியைத் தோண்டிச் சென்றார். அங்கே இரண்ணியாட்சனைக் கண்டு அவனோடு கடும்போர் புரிந்து, கொன்று, உலகத்தைக் கொம்பிலே தாங்கி நின்று மீட்டார். இதுதான் விஷ்ணுமூர்த்தியின் வராகாவதாரம் என்பது. இரண்ணியகசிபு பின்பு நரசிங்கமூர்த்தியால் கொல்லப்பட்டான்.

---

## 4. ஆகமப்பிரமாணம்

நாம் ஒரு பொருளைக் கண்ணால் நேரிற் கண்டு அறிகின்றோம்; காதாற் கேட்டு அறிகின்றோம்; மனத்தால் உணர்ந்து அறிகின்றோம். இப்படி அறியும் முறை பிரத்தியக்ஷப்பிரமாணம் அல்லது காட்சி அளவை எனப்படும். இப்படியே எல்லாவற்றையும் நாம் அறிய முடியாது; சிலவற்றை, ஒன்றைக்கொண்டு மற்றொன்றை அறிய வேண்டும். அஃதாவது புகை ஓரிடத்தில் இருந்தால் அங்கே நெருப்பு இருக்கவேண்டும் என்று எண்ணுகிறோம். இப்படி 'அறியும் முறை அனு

மானப் பிரமாணம் அல்லது கருதல் அளவை எனப்படும். இவ்விரண்டினைக் கொண்டேயும் எல்லாப் பொருள்களையும் நாம் அறிந்துவிட முடியாது. சில பொருள்களைப் பேரறிவுடைய ஆன்ருேர்கள் அறிந்து எழுதி வைத்த நூல்களைக் கொண்டுதான் அறிய வேண்டும். அவர்களுக்கு, நமக்குத் தோன்ருத விஷயங்கள் தோன்றி யிருக்கக் கூடும். அவர்கள் நம்மைக் கடைத்தேற்றுவதற்காகவே அரிய நூல்களை எழுதி வைத்தனர். நம்மை வஞ்சிக்கவேண்டும் என்னும் கருத்து அவர்களுக்கு இல்லை. இப்படிச் செய்வதால் அவர்கட்கு யாதொரு பயனும் இல்லை. அவர்கள் உலகப் பற்றை விட்டுக் கடவுள் திருவடிகளையே எப்பொழுதும் நினைத்துக்கொண் டிருந்தவர்கள். ஆதலால் அவர்கள் ஒரு பற்று வைத்து ஒன்றும் சொல்ல மாட்டார்கள். அவர்களுக்குக், கடவுள் அருளால் அறிவு நம்மைக் காட்டிலும் அதிகமாக விளங்கும். அவர்கள் செருக்கு அற்றவர்கள் ஆகையால் எதையும் சாதிக்கவேண்டும் என்னும் எண்ணத்தோடு சொல்லமாட்டார்கள். அப்படிப்பட்ட பெரியோர்கள் திருவாக்குக்களே ஆகமப்பிரமாணம் அல்லது உரை அளவை என்று சொல்லப்படும்.

முன்னே வேதம், ஆகமம், உபநிடதம், புராணம் என்பவைகளைப் பற்றிக் கூறினேன்.

தேவாரம், நாலாயிரம் முதலிய தமிழ் வேதங்களைப் பற்றியும் சொல்லி இருக்கிறேன். இவைகள் எல்லாம் பொதுவாக ஆகமம் என்றே சொல்லப் படும். தமிழிலே சைவத் திருமுறைகள் வேறு சில உண்டு. அவற்றைப் பற்றியும் நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் இவை என்பதைப் பற்றியும் சொல்லுகிறேன், கேளுங்கள் :

சைவத் திருமுறைகள், திருஞான சம்பந்தர் அருளிச்செய்த தேவாரம் ஒன்றுமுதல் மூன்று திருமுறைகளாகவும், திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச்செய்த தேவாரம் நான்குமுதல் ஆறு திருமுறைகளாகவும், மாணிக்கவாசக சுவாமிகள் அருளிச்செய்த திருவாசகமும் திருக்கோவையாரும் எட்டாந் திருமுறையாகவும், திருமாளிகைத் தேவர் முதலிய ஒன்பது அடியார் அருளிச்செய்த திருவிசைப்பாவும் சேந்தனர் அருளிச்செய்த திருப் பல்லாண்டும் ஒன்பதாந் திருமுறையாகவும், திருமூல நாயனர் அருளிச்செய்த திருமந்திரம் பத்தாந் திருமுறையாகவும், காரைக்கால் அம்மையார், நக்கீரர், கபிலர், சேரமான் பெருமாள் நாயனர், நம்பியாண்டார் நம்பி முதலானவர்கள் அருளிச்செய்த நாற்பது நூல்களும் பதினோராந் திருமுறையாகவும், சேக்கிழார் சுவாமிகள் அருளிச்செய்த திருத்தொண்டர் புராணம் என்னும் பெரிய புராணம் பன்னிரண்டாந் திருமுறையாகவும் பகுக்கப்பட்

டுள்ளது. இவையெல்லாம் சைவர் போற்றிக் கொள்ளும் அருள் நூல்களாம்.

ஆழ்வார்கள் பன்னிருவரும் வைணவ சமயத்துக்கு ஆசாரியர் ஆவர். அவர்கள் திருநாமங்கள் பின்வருவன: 1. பொய்கை ஆழ்வார், 2. பூதத்தாழ்வார், 3. பேயாழ்வார், 4. திருமழிசை ஆழ்வார், 5. மதுரகவி ஆழ்வார், 6. நம்மாழ்வார், 7. குலசேகராழ்வார், 8. பெரியாழ்வார், 9. ஆண்டாள், 10. தொண்டரடிப்பொடி ஆழ்வார், 11. திருப்பாணாழ்வார், 12. திருமங்கை ஆழ்வார். இவர்கள் அருளிச்செய்த திருப் பாடல்கள் வைணவர் போற்றிக்கொள்ளும் அருள் நூல்களாம். இத் திருப் பாசுரங்களே நாலாயிரத் திவ்யப் பிரபந்த மாகும்.

பாட்டு

சீரங்க நாயகர் ஊசல்

அன்பென்னும் நன்பொருளோர் தகளி யாக
ஆர்வமே நெய்யாக அதனுட் டேக்கி
இன்புருகு சிந்தையிடு திரியா ஞானத்து
இலகுவிளக் கேற்றினன் இசையைப் பாடப்
பொன்புரையும் புகழுறையூர் வல்லி யாரும்
புதுவைநகர் ஆண்டாளும் புடைசேர்ந் தாட
முன்பினும்பின் பழகியநம் பெருமாள் தொல்லை
மூவுலகுக் கும்பெருமாள் ஆடி ரூசல். (க)

அடித்தலத்திற் பரிபுரமுஞ் சிலம்பு மாட
அணிமார்பிற் கௌத்துவமுந் திருவு மாடத்
தொடித்தலத்தின் மணிவட்முந் துளவு மாடத்
துணைக்கரத்திற் சக்கரமுஞ் சங்கு மாட
முடித்தலத்திற் கருங்குழலுஞ் சுரும்பு மாட
முகமதியிற் குறுவேர்வுங் குழையு மாடக்
கடித்தலத்தி லரைநாணுங் கலையு மாடக்
காவிரிசூ ழரங்கேச ராடி ரூசல். (உ)

உணராத மதலையிளங் குதலைச் சொல்லை
உளமுருகித் தந்தைதா யுவக்கு மாபோல்
தணவாமற் கற்பிப்பார் தஞ்சொற் கேட்டுத்
தத்தையுரைத் தத்தையா தரிக்கு மாபோல்
பணவாள ராமுடிமேற் படியேழ் போற்றும்
பட்டர்திருத் தாட்கடிமைப் பட்ட காதல்
மணவாள தாசன்றன் புன்சொற் கொண்ட
மதிலரங்க மணவாள ராடி ரூசல். (ந)

பிள்ளைப் பெருமாளையங்கார்.

தந்தம் உறியி லவர்வைத்த தயிர்பால் வெண்ணெய் எட்டாமல்
குந்தி உரலின் மிசைஏறி இளங்கோ வியர்முன் கூத்தாடி
நந்தன் மனையில் அசோதைஇரு நயனங் களிக்க விளையாடும்
மைந்தன் இருதாள் ஒருநாளும் மறவா தாரே பிறவாதார். (ச)

மேவரு ஞான னந்த வெள்ளமாய் விதித்தோன் ஆதி
மூவரு மாகி அந்த மூவர்க்குள் முதல்வ னாகி
யாவரும் யாவும் ஆகி இறைஞ்சுவார் இறைஞ்சப் பற்பல்
தேவரும் ஆகி நின்ற செங்கண்மால் எங்கள் கோவே. (ரு)

குன்றெடுத் தாயர் மாதர் குரவைகொண் டொருவி ளாவில்
கன்றெடுத் தெறிந்து வெய்ய காளியற் கிருதாள் நல்கி
அன்றெடுத் திறுத்த வில்லே அனையவில் விழவு காண்பான்
சென்றெடுத் திறுத்து நின்ற செங்கண்மால் எங்கள் கோவே

படர்ந்த கானகந் திரிந்தமீண் டன்புடன் பணிந்த பஞ்சவர்க காகக்
கடந்த ஞானியர் கடவுளர் காண்கலாக் கழலிணை சிவப்பேறத்
தொடர்ந்த நான்மறை பின்செலப் பன்னக துவசன்மா நகர்த் தூது
நடந்த நாயகன் கருமுகில் வண்ணம் என் நயனம்விட் டகலாதே (எ)

மீன மாகியுங் கமட்ட மாகியும் மேருவை எடுக்குந்தாள்
ஏன மாகியும் நரவரி ஆகியும் எண்ணருங் குறளாயும்
கூனல் வாய்மழுத் தரித்தகோ வாகியும் அரக்கரைக் கொலைசெய்து
வான நாயகன் ஆகியும் நின்றமால் மலரடி மறவேனே. (அ)

பாரதம், வில்லிபுத்தூராழ்வார்.

வெண்ணெய் அளைந்த குணுங்கும் விளையாடு புழுதியும் கொண்டு
திண்ணென இவ்விரா உன்னைத் தேய்த்துக் கிடக்கநான் ஒட்டேன்
எண்ணெய் புளிப்பழங் கொண்டிங் கெத்தனை போதும் இருந்தேன்
நண்ணலரிய பிரானே, நாரணா, நீராட வாராய். (க)

கன்றுகள் ஓடச் செவியில் கட்டெறும்பு பிடித் திட்டால்
தென்றிக் கெடுமாகில் வெண்ணெய் திரட்டி விழுங்குமா காண்பன்
நின்ற மராமரம் சாய்த்தாய், நீபிறந் ததிரு வோணம்
இன்று நீ நீராட வேண்டும் எம்பிரான், ஓடாதே வாராய்.(உ)

எண்ணெய்க் குடத்தை உருட்டி இளம்பிள்ளை கிள்ளி எழுப்பி,
கண்ணைப் புரட்டி விழித்துக் கழகண்டு செய்யும் பிரானே
உண்ணக் கனிகள் தருவன் ஒலிகடல் ஓதநீர் போலே
வண்ணம் அழகிய நம்பீ, மஞ்சனம் ஆடநீ வாராய். (ங)

கன்றினை வாலோலை கட்டிக் கனிகள் உதிர எறிந்து
பின்தொடர்ந் தோடியோர் பாம்பைப் பிடித்துக்கொண் டாட்டினுய்
நின்திறத் தேனல்லேன் நம்பீ, நீபிறந்த திரு நன்னுள் [போலும்
நன்றுநீ நீராட வேண்டும் நாரணு, ஓடாதே வாராய். (ச)

பூணித் தொழுவினில் புக்குப் புழுதி அளைந்தபொன் மேனி
காணப் பெரிதும் உகப்பன் ஆகிலும் கண்டார் பழிப்பர்
நாண் எத்தனையும் இலாதாய், நப்பின்னை காணில் சிரிக்கும்
மாணிக்க மே, என் மணியே, மஞ்சனம் ஆடநீ வாராய். (ரு)

நாலாயிரம், பேரியாழ்வார்.

---

## 5. சூடிக் கொடுத்தாள்

பாண்டிய நாட்டிலே வில்லிபுத்தூர் என்னும் திருப்பதியிலே விஷ்ணுசித்தர் என்னும் பெயரை யுடைய அந்தணர் ஒருவர் இருந்தார். அவர் திருமாலுக்குப் பூமாலை தொடுத்துச் சாத்துத லாகிய திருத்தொண்டை மிகவும் விரும்பிச் செய்து வந்தார். அதன் பொருட்டு அவர் நந்த வனம் வைத்து அதனைக் கண்போலப் பாது காத்து வந்தனர். அவருக்குப் பேரியாழ்வார் என்னும் சிறப்புத் திருநாமமும் உண்டு.

அவர் ஒருநாள் தமது நந்தவனத்தைத் திருத்துழாய்ப் பாத்தி வைக்கக் களைகொட்டைக் கொண்டு கொத்தினுர். அப்பொழுது அந்நிலத் திலே ஓர் அருமை மகள் தோன்றினுள். அவ ளைக் கண்டதும் ஆழ்வார் அளவற்ற மகிழ்ச்சி

அடைந்தார். அப் பெண்ணரசியைப் பெரியாழ்வார் தமது திருமகளாகவே பாவித்து அன்போடு வளர்த்து வந்தார்; தாம் பெருமானுக்குச் சாத்தும் பூமாலையாகவே அப்பாவையைக் கருதினர்; அதனல் அவளுக்குக் 'கோதை' என நாமகரணம் செய்தார். கோதை என்ருல் மாலை என்பது பொருள். ஆழ்வார், கடவுள் அன்புக்கு உரிய கல்வியையும் கோதைக்குப் புகட்டினர்.

கோதை இங்ஙனம் வளர்ந்து வருகையில், திருமாலையே தான் மணஞ் செய்துகொள்ள வேண்டும் என்னும் ஆசை உடையவள் ஆனள். அவளுக்கு எப்பொழுதும் திருமாலை வாழ்த்துவதும் வணங்குவதுமே வேலை. அவள் நாடோறும் பெரியாழ்வார் வடபத்ரசாயிக்குச் சாத்தும் பொருட்டுக் கட்டிவைத்திருக்கும் திருமாலையை ஆழ்வார் இல்லாத சமயம் பார்த்து எடுத்துத் தனது கூந்தலிலே அணிந்து கொள்ளுவாள்; பின்பு நல்ல ஆடைகளையும் ஆபரணங்களையும் தரித்துக்கொள்ளுவாள்; அதன் பின்பு தன்னுடைய அழகைக் கண்ணுடியிலே பார்த்து, "நான் எம் பெருமானுக்கு நேரொத்திருக்கிறேன?" என்று சொல்லிக்கொள்வாள். பிறகு அவ்வம்மை மாலையைக் கழற்றி முன்போலவே செண்டாகச் சுற்றிக் கசங்காமல் வைத்து விடுவாள். இச்செய்தி விஷ்ணு சித்தருக்குத் தெரி

யாது. அதனால் அவர் ஒவ்வொரு நாளும் கோதை சூடி வைத்த மாலையையே எடுத்துக் கொண்டுபோய்த் திருமாலுக்குச் சாத்தி வந்தார்.

இவ்வாறு சில நாட்கள் சென்றன. ஒருநாள் ஆழ்வார், பெருமாளுக்குக் கட்டி வைத்திருந்த மாலையைக் கோதை சூடுவதைக் கண்டுவிட்டார். அவர் உடனே கோபங்கொண்டு, தம் மகளை நோக்கி, "பேதாய், நீ பெரிய அபசாரம் செய்தாய்! இனி இவ்வாறு செய்ய நெஞ்சிலும் நினையாதே," என்று சொல்லிவிட்டுச் சென்றார். அன்று ஆழ்வார் பெருமாளுக்கு மாலை சாத்தாமல் வருந்திக் கொண்டிருந்தார்.

அன்றிரவு திருமால் ஆழ்வாருடைய கனவிலே தோன்றி, "நீ இன்று நமக்கு மாலை சாத்தாத காரணம் என்ன?" என்று கேட்டார். அதற்கு ஆழ்வார் நடந்த செய்தியைக் கூறி வருந்தினார். அதைக் கேட்ட பெருமான், "நமக்குக் கோதை சூடிக் கொடுத்த மாலையே மிகவும் விருப்பமானது; அதுவே மணத்திலும் விஞ்சியது; ஆதலால் அவள் சூடிக்கொடுத்த மாலையையே இனி எனக்குச் சூட்டுவாயாக," என்று அருளிச் செய்தார். உடனே விஷ்ணுசித்தர் விழித்தெழுந்து கோதையைத் திருமகள் என்றே கொண்டு, அவளிடத்தில் பயபக்தியோடு நடந்து வந்தார்; அவளுக்கு ஆண்டாள் என்றும் சூடிக்

கொடுத்த நாய்ச்சியார் என்றும் திருப் பெயரிட்டுப் பாராட்டி அழைத்தார்.

ஆண்டாள் திருமாலையே மணப்பதாக உறுதி செய்து கொண்டாள். அப் பெருமான் மீது 'திருப்பாவை,' 'நாய்ச்சியார் திருமொழி' என்னும் அற்புதத் திருப் பாசுரங்களைப் பாடினாள். அவளுக்கு மணஞ் செய்யும் காலம் வந்தது. அப்போது ஆழ்வார், தம் மகளை, "நீ யாரை மணஞ் செய்துகொள்ள விரும்புகிறாய்"? என்று கேட்டார். அதற்குச் சூடிக் கொடுத்த நங்கை, "நான் பெருமாளையே மணம்புரிவேன், வேறொருவரையும் நினையேன்," என்றனள். அது கேட்டு விஷ்ணுசித்தர், "நீ எந்த எம்பெருமானுக்கு வாழ்க்கைப்பட விரும்புகின்றாய்?" எனக் கேட்டனர். அதற்கு ஆண்டாள், "ஒவ்வொரு திவ்ய தேசத்திலும் உள்ள பெருமானுருடைய வைபவத்தை எடுத்துரைத்தால் சொல்லுவேன்," என்றனள். அவ்வாறே ஆழ்வார் ஒவ்வொருவருடைய வைபவ விசேஷங்களையும் விளங்க எடுத்துரைத்தார். ஆழ்வார் சொல்லியவற்றை எல்லாம் கேட்டுவந்த கோதை திருவரங்கநாதன் திருவழகைச் சொல்லுகையில், நாணி ஒசிந்தாள். உடனே ஆழ்வார் தம் அருமந்த மகளுக்கு மணமகன் உறுதிப்பட்டவுடன் மிக்க பேரின்பத்திலே திளைத்தார். ஆனாலும் அவர், "நம்

பெருமாள் கோதையை மணம் செய்துகொள்ளு தல் எவ்வாறு?" என்று எண்ணிக் கவலை கொண் டார்.

இப்படி இருக்கையில் திருவரங்கச் செல் வன் பெரியாழ்வார் கனவிலே எழுந்தருளி "உமது திருமகளைக் கோவிலுக்கு அழைத்து வாரும்; நாம் அவளை ஏற்றுக்கொள்வோம்," என்று சாதித்தருளினுன். அதனுல் ஆழ்வார் கவலை நீங்கினுர். திருவரங்கத்தெம்பிரான் ஆழ்வாருக்கு அருள்செய்த அன்றே கோயில் ஸ்தாநிகர் முத லான பரிசனங்களுடைய கனவிலே தோன்றி, "நீங்கள் எல்லாச் சிறப்புக்களோடும் வில்லிபுத் தூருக்குச் சென்று, நமது நவரத்தின சிவிகை யிலே ஆண்டாளை அழைத்துக்கொண்டு வாருங் கள்," என்று கட்டளையிட்டான்.

அவ்வாறே கோயிலார் எல்லாரும் வில்லிபுத் தூருக்குச் சென்று பெரியாழ்வாருக்கு நம்பெரு மாள் கட்டளையை விண்ணப்பித்தார்கள். ஆழ் வார் மிக்க களிப்புடையவராய் வடபெருங் கோயில் அழகிய மணவாளனை வணங்கிக்கொண்டு போனுர். அப்பால் ஆண்டாளை மணிச் சிவிகை யில் ஏற்றிக்கொண்டு வந்தார். இந்த மணச் சிறப் பைக் கண்டு களிப்பதற்கு ஸ்ரீவல்லபதேவன் என்னும் அரசனும், தனது சேனைகள் புடை சூழ மிகவும் ஆடம்பரத்துடன் வந்தான். யாவ

ரும் திருவரங்கத்தை அடைந்ததும், பெரியாழ் வார் ஆண்டாளைப் பல்லக்கினின்றும் இறக்குவித் தார். பிராட்டியும் கோயிலுட் சென்று பெரிய பெருமாளைச் சேவித்து நின்றாள். அரங்கநாதன் அழகு வெள்ளத்திலே பிராட்டி ஈடுபட்டு விட் டாள். பின்பு ஆண்டாள் திருக்காலிற் சிலம்பு மிழற்றவும் கைவளை ஒலிக்கவும் அன்னம்போல நடந்து, அவன் திருமேனியிலே கலந்துவிட்ட னள்.

---

## 6. அடியார்க் கெளியன்

முற்காலத்திலே சோழ நாட்டைச் சார்ந்த தும் இக்காலத்தே தஞ்சாவூர் ஜில்லாவிலே உள் ளதுமாகிய பஞ்சநதம் என்னும் திருவையாறு ஒரு சிறந்த க்ஷேத்திரம். இத்தலத்திலே திருக் கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் பஞ்சந தேசுவரரை அருச்சனை செய்வோர் இருபத்து நால்வர். அவர் அனைவரும் ஆதிசைவப் பிராம ணர்.

இவர்களுக்குள்ளே ஒருவர் கங்கையில் நீரா டும் பொருட்டு வடநாட்டிலே உள்ள காசிக்கு யாத்திரையாகச் சென்றார். அப்போது புகை வண்டி முதலான துணைகள் இல்லை. அதனால் அவர் நெடுநாளாகத் திரும்பி வரவில்லை. அது

கண்டு மற்ற இருபத்து மூன்று அருச்சகரும் அவருடைய காணி முதலிய வருமானங்களைத் தமக்குள் பங்கிட்டுத் தங்கள் பேரில் சாசனம் எழுதிவைத்துக்கொண்டு அநுபவிக்கத் தொடங்கினார்கள். இச்செய்தி காசியாத்திரை போனவர் மனைவிக்குத் தெரிய வந்தது. உடனே அம்மாது தன் மைந்தனுடன் அருச்சகர் இடம் சென்று, தன்னுடைய பொருளை அவர்கள் அபகரிப்பது தகாது என்று தடுத்தாள். அதற்கு அவர்கள் அவளை நோக்கி, "உன் கணவன் இப்பொழுது கோயிலில் வேலை பார்ப்ப தில்லை. அன்றியும் பிள்ளை இல்லாதவன் பொருளைப் பங்காளிகள் பங்கிட்டுக் கொள்வது நியாயமே," என்று மறுத்துக் கூறினார்கள். இதனைக் கேட்ட அப்பாவை, "ஐயன்மீர், யாத்திரை சென்றவர் மனைவியாகிய நான் இருக்கின்றேன்; அவர் பெற்ற மைந்தனும் இதோ இருக்கின்றான்; அவரும் விரைவில் வந்துவிடுவார்; நீங்கள் பூசை செய்யும் தெய்வத்துக்குப் பயந்தாவது இப்படிப்பட்ட அநீதியைச் செய்யவேண்டாம்," என்று ஆற்றாமையோடு கூறினாள்.

அப்போது அந்த அருச்சகர்கள், "பெண், காணி ஆளப் போகிறாயோ?" என்று சொல்லி, அவளுடைய கழுத்தைப் பிடித்து நெட்டித் தள்ளச் சொல்லினர். உடனே அவள் அவர்களைப்

பார்த்து, "எங்களுக்குத் தெய்வமே துணையிருக்க வேண்டும்," என்று சொல்லிப் புலம்பிவிட்டுப் போனுள். பின்பு அவள் திருக் கோயிலுக்குட் சென்று விழுந்து வணங்கி, "ஐயனே, அருட் கடலே, ஏழைபங்காளரே, உம்முடைய திருவடி களுக்கு அடியேன் அடைக்கலம்," என்று தேம்பி அழுதாள். அவளுடைய அருகிலே இருந்த குழந்தையும் தாய் அழுவதைப் பார்த்து விம்மி அழுதது.

அவற்றைக் கண்ட சிவபெருமான் திருவை யாற்றுக்குப் பக்கத்திலே உள்ள விளாங்குடி என் னுங் கிராமத்தில் காசி யாத்திரை செய்த சிவப் பிராமணரைப் போல வந்தார். அவர் உடம்பிலே நெற்றி, மார்பு, தோள் முதலிய பதினேரு இடங் களிலும் திருநீற்றை மூன்று புண்டரமாக அணிந் திருந்தார் ; கழுத்திலும், தலையிலும் உருத்தி ராக்க மாலையைத் தரித்திருந்தார் ; காசி கங்கை கட்டிய காவடியைத் தோளிலே சுமந்திருந்தார்.

இக்கோலத்துடன் சிவபெருமான் திருவை யாற்றுக்கு வந்து, அருச்சகர் இருக்குமிடஞ் சென்று, "பஞ்சநதேசுவரரும், உமாதேவியா ரும், விநாயகரும், முருகவேளும், நீங்களும் சுகமாக இருக்கின்றீர்களா?" என்று வினவி, அவர் களை இறுகத் தழுவிக்கொண்டார். அப்பொழுது அருச்சகர்கள் வெட்க மடைந்து, தலைகுனிந்து

நின்றனர். பிறகு காசிப் பிராமணர், "என்னுடைய காணியை அபகரித்தவர் யார் ?" என்று கேட்டார். அப்போது இருபத்துமூன்று பிராமணரும் தாங்கள் செய்த குற்றத்தைப் பொறுத்தருளவேண்டுமென்று வணக்கத்துடன் கேட்டுக் கொண்டார்கள்.

அந்நேரத்திலே அவர் மனைவியும் மைந்தனும் வந்து, அவரைக் கண்டு அழுதார்கள். சிவப்பிராமணர் அவர்கள் இருவரையும் தேற்றி இருப்பிடத்துக்கு அனுப்பினர். பின்பு அவர் சூரியபுட்கரணி தீர்த்தத்திலே நீராடி, அனுஷ்டானம் செய்துகொண்டு கோயிலுக்குட் சென்றார்; சென்று திருப்பள்ளித்தாமம் கொண்டு வந்து, கங்கை நீரால் பெருமானுக்கு அபிஷேகம் செய்து, ஆடைசாத்தினர்; சந்தன புஷ்பம் சாத்தித் தூபதீப நைவேத்தியம் காட்டி அருமையாகப் பூசனை செய்து முடித்தார். பின்பு அவர் வெளியே வந்து சிவாசாரியருடைய பொது மடத்திலே வீற்றிருந்தார்.

அப்போது காசியாத்திரை செய்த அருச்சகர் கங்கை நீர் தாங்கிய காவடியுடன் சைவாசாரியார் சபையின்முன் வந்து சேர்ந்தார். சபையார் இஃதென்ன மாயம் என்று மயங்கினர்கள்; மனைவியும் மைந்தனும் கண்டு திகைத்து நின்றனர். உடனே சிவபெருமான் அந்த அருச்சகரை

"நீர் யார்?" என்று கேட்டார். அவர், "நான் இரு பத்து நான்கு அருச்சகரிலே ஒருவன்; முதற் பூசைக்கும் உரியன்," என்றார். அதுகேட்ட சிவ பெருமான் தாமே அருச்சனைக்கு உரியவர் என்று பலவாறு பேசி அவர் வாயை அடக்கினார். அருச் சகர் அழுதுகொண்டே சென்று, தம்மிடம் உள்ள சாதனங்களைக் கொண்டு வந்து சபையோருக்குக் காட்டினர். சிவபெருமானும் அப்படியே சாசனங் களைத் தம்மிடம் இருந்து எடுத்துக் காட்டினர். சபையோர்களும் இருவருடைய சாசனங்களையும் பார்த்தார்கள். அவை ஒன்றுக்கொன்று வேற்று மை இன்றி இருந்தன. பிறகு சபையோர்கள் ஒன் றும் தோன்றாமல் திகைத்துச் சில குறிப்புக்களால் மெய்ச் சாசனத்தையே பொய்ச் சாசனம் என்று தீர்ப்புச் சொன்னார்கள். உண்மை அருச்சகர் திக் பிரமை கொண்டார். சிவபெருமான் திருவுரு மறைந்து, ஆகாயத்தில் இருந்து, "சைவர்களே, நம்மை அருச்சிக்கும் இந்தச் சைவனுக்கு உங் கள் உரிமை எல்லாவற்றிலும் இரண்டு பங்கு தருவீராக," என்று அருள் செய்தார். அத்திரு வாக்கை யாவரும் கேட்டுத் திருவருளைப் புகழ்ந்து ஆனந்தக் கூத்தாடினார்கள்.

பாட்டு

நல்ல மருந்திம் மருந்து-சுகம்
நல்கும் வைத்திய நாத மருந்து.

அருள்வடி வான மருந்து-நம்முள்
அற்புத மாக அமர்ந்தமருந்து
இருள்அற ஓங்கும் மருந்து-அன்பர்க்கு
இன்புரு வாக இருந்த மருந்து. (நல்ல)

பிறப்பை ஒழிக்கும் மருந்து-யார்க்கும்
பேசப் படாத பெரிய மருந்து
இறப்பைத் தவிர்க்கும் மருந்து-என்னுள்
என்றும் மதுரித் தினிக்கும் மருந்து. (நல்ல)

புத்தமு தாகும் மருந்து-பார்த்த
போதே பிணிகளைப் போக்கும் மருந்து
பத்தர் அருந்தும் மருந்து-அநு
பானமுந் தானும் பரம மருந்து. (நல்ல)

ஆர்க்கும் அரிதாம் மருந்து-தானே
ஆதி அநாதியும் ஆன மருந்து
சேர்க்கும் புனித மருந்து-தன்னைத்
தேடுவோர் தங்களை நாடும் மருந்து. (நல்ல)

புண்ணியர்க் கான மருந்து-பரி
பூரண மாகப் பொருந்தும் மருந்து
எண்ணிய இன்ப மருந்து-எமது
எண்ண மெல்லா முடித்திட்ட மருந்து. (நல்ல)

பால்வண்ணம் ஆகும் மருந்து-அதிற்
பச்சை நிறமும் படர்ந்த மருந்து
நூல்வண்ணம் நாடும் மருந்து-உள்ளே
நோக்குகின் றோர்களை நோக்கும் மருந்து. (நல்ல)

வாய்பிடி யாத மருந்து-மத
வாதமும் பித்தமும் மாய்க்கும் மருந்து

நோய் பொடியாக்கும் மருந்து-அன்பர்
நோக்கிய நோக்கினுள் நோக்கும் மருந்து.(நல்ல)
காயாம்பூ வண்ண மருந்து-ஒரு
கஞ்ச மலர்மிசைக் காணும் மருந்து
தாயாம் கருணை மருந்து-சிற்
சதாசிவ மானமெய்ஞ் ஞான மருந்து. (நல்ல)
மூவர்க் கரிய மருந்து-செல்வ
முத்துக் குமாரனை ஈன்ற மருந்து
நாவிற் கினிய மருந்து-தையல்
நாயகி கண்டு தழுவும் மருந்து. (நல்ல)

**திருவருட்பா, இராமலிங்க சுவாமிகள்.**

## 7. உயிர்

உலகத்தைக் கொண்டு எப்படிக் கடவுளை நாம் தெரிந்து கொண்டோமோ அப்படியே உடம்பைக் கொண்டு உயிரைத் தெரிந்துகொள்ள வேண்டும். உயிர் என்பது என்ன ? அஃதெப்படி இருக்கும் ? என்று பார்க்கலாம். சிலர் இந்த உடம்பைக் காட்டிலும் உயிர் என்று ஒரு பொருள் இல்லை என்பார்கள். ஆனால், இறந்துபோன பிணத்துக்கு உடம்பு இருந்தும் செயல் இல்லாதிருப்பதை நாம் பார்க்கிறோம். அதனால் உடம்பைக் காட்டிலும் வேறொரு பொருள் இருக்கிறது என்பது நமக்குப் புலப்படும் அல்லவா ?

சிலர், "நாங்கள் ஆராய்ந்து பார்த்ததில் உயிர் என்று ஒரு பொருள் காணப்படவில்லை,"

என்று கூறுகிறார்கள். இப்படிச் சொல்லுகிறவர்கள் யார்? என்று அவர்கள் பார்ப்பார்களானால் அவர்களுக்கு உண்மை ஏற்படும். இவ் விஷயத்தை உடம்பு சொல்லிற்றா? அல்லது வாய் சொல்லிற்றா? உடம்பு சொல்லாது; ஏனென்றால் பிணமாக இருக்கும்பொழுது, அஃது ஒன்றும் செய்யக் காணோம்; வாய் சொல்லிற்றா? அதுவும் இல்லை; ஏனென்றால் அதுவும் பிணமாக இருந்த பொழுது பேசக் காணோம். ஆதலால் உடம்புக்குள் யாதோ ஒரு பொருள் அறிவுடையதாக இருத்தல் வேண்டும். அதுவே உயிர், ஆன்மா.

உயிர் கண்ணைக்கொண்டு பார்க்கிறது; காதைக் கொண்டு கேட்கிறது; நாவைக் கொண்டு சுவைக்கிறது; மூக்கைக் கொண்டு மோக்கிறது; உடம்பைக் கொண்டு உற்று அறிகிறது. அதுவே கை, கால், வாய் முதலிய உறுப்புக்களைக் கொண்டு தொழில்களைச் செய்கிறது; நெஞ்சைக் கொண்டு நினைக்கிறது.

நாம் கண், காது, மூக்கு, நாக்கு, உடம்பு முதலியவைகளால் பொருள்களை அறிவதால் இந்த ஐந்து பொறிகளையே உயிர் என்று சொல்லக் கூடாதா? என்று நீங்கள் கேட்கலாம். இதை நாம் சிறிது ஆராய்ந்து பார்ப்போம். ஒருவன் உடம்பைச் சுட்டும் பொழுது 'என் உடம்பு' என்று சொல்லுகிறான்; அவன் சொல்லும்பொழுது

'என்' என்று அவன் குறித்த பொருள் எது? அதுதான் உயிர். உடம்பே உயிராக இருந்தால் 'நான் உடம்பு' என்று சொல்லவேண்டும்; அப்படி யாரும் சொல்வாரில்லை. இப்படியே எல்லாரும் 'என் கண், என் காது, என் மூக்கு' என்று சொல்லுகிறார்களே ஒழிய, 'நான் கண்' நான் காது' என்று சொல்வது இல்லை. கண், காது முதலிய உறுப்புக்கள் உயிராக இருந்தால் 'நான் கண், நான் காது' என்று சொல்லவேண்டும்.

அன்றியும் இந்த ஐம் பொறிகளும் உயிராக இருந்தால் இவைகள் ஒவ்வொன்றும் எல்லாவற்றையும் அறியவேண்டும். அப்படி அவை அறியவில்லை. கண் ஒரு பொருளைப் பார்க்குமே ஒழியக் காதைப்போலக் கேட்காது; காது ஒன்றைக் கேட்குமே ஒழிய ஒன்றைப் பார்க்காது. இப்படியே ஒவ்வொன்றும் ஒன்றை அறியுமே தவிர எல்லாவற்றையும் ஒருங்கே அறியாது. ஆதலால் இவ்வைந்து பொறிகளையும் கொண்டு அறிகிற உயிர் இவற்றிற்கு வேறாக உண்டு என்று நாம் துணிய வேண்டும்.

நமக்குத் தோன்றுகிற இந்த உடம்புக்கு ஸ்தூல தேகம் அல்லது பரு உடம்பு என்று பேர். இதற்குள் ஓர் உடம்பு இருக்கிறது; அதற்கு சூக்ஷ்ம சரீரம் அல்லது நுண்ணுடம்பு என்று பெயர். அதுதான் உயிர் என்று சிலர் சொல்லு

கிருர்கள். இதை நாம் ஆராய்ந்து பார்க்கலாம். நாம் தூங்கும்பொழுது கனுக் காண்கிரேும். அப்போது நம்முடைய கண், காது முதலான உறுப்புக்கள் எல்லாம் ஒடுங்கி இருக்கின்றன. கனுக் காண்பது நம்முடைய சூக்ஷ்ம சரீரமே ஆகும். இந்தச் சரீரம் உயிராக இருந்தால், விழித்த பின் கனுவிலே கண்டதை எல்லாம் அப்படியே அறிய வேண்டும். ஆனுல் ஒவ்வொருவரும் கனுவிற் கண்டதை மயங்கி அறிகிருர்களே ஒழிய அப்படியே அறிய வில்லை. இதனுல் சூக்ஷ்ம தேகம் உயிர் அன்று எனத் தெரிந்து கொள்ளலாம்.

உடம்பிலே தொழில் செய்யும் பிராணவாயு அடங்கிவிட்டால் மக்கள் இறக்கிருர்கள். மூச்சு அடங்கிவிட்டால் உயிர் போய் விட்டது என்று எல்லாரும் சொல்லுகிருர்கள் அதனுல் பிராணவாயுவே உயிர் என்று சொல்லக் கூடாதா? என்ருல், நாம் தூங்கும் பொழுது பிராணவாயு தொழில் செய்கிறது. ஒவ்வொருவரும் அதைக் காண்கிரேும்; ஆனுல் நமக்கு அப்பொழுது புசிப்பும் தொழிலும் இல்லை. பிராணவாயு உயிராக இருந்தால், அது தொழில் செய்துவரும் தூக்கத்திலும், புசிப்பும் தொழிலும் இருக்க வேண்டும். அப்படி இல்லாததால் பிராணவாயு உயிர் அன்று என்பது தெளிவாகப் புலப்படும்.

இப்படியே மனம் ஒன்றை அறியுமே அல்லாமல் தெளிந்து துணிய மாட்டாது. ஆதலால் அதுவும் உயிர் அன்று.

உயிரானது அறிவுடைய நுட்பமான பொருள். அஃது உடம்பை இயக்கிக்கொண்டு இருக்கிறது ; ஐம்பொறிகளைக் கொண்டும் மனத்தைக் கொண்டும் அறிகிறது. அஃது உடம்பு முழுவதும் பரவி இருக்கிறது ; அதற்கு உருவம் இல்லை. அஃது, மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்னும் ஐந்து பூதங்களில் ஒன்றும் அன்று ; அவைகளின் சேர்க்கையினுல் ஆனதும் அன்று. அதை நாம் காணமுடியாது ; அஃது எப்பொழுதும் அழியாதது. ஆனுல் அது கடவுளும் அன்று. கடவுள் வேறு ; உலகம் வேறு ; உயிர் வேறு.

---

## 8. பெற்ருன் சாம்பான்

ஏறக்குறைய எழுநூறு ஆண்டுகளுக்கு முன்னே சிதம்பரத்திலே பெற்ருன் சாம்பான் என்னும் பெரியவர் ஒருவர் இருந்தனர். அவர் புலையர் குலத்திலே பிறந்தவர் ; குலத்தால் சிறியவராக மதிக்கப்பட்ட அவர் குணத்தால் யாவராலும் துதிக்கப்பட்டவரானுர். அவர் சிவபெருமானிடத்திலே பேரன்புடையவர் ; எப்படியாவது கடவுளுக்குத் திருப்பணி செய்ய வேண்டுமென்று

அவர் எண்ணினர்; அதனால் அவர் தமக்கு இயன்ற ஒன்றைத் தெரிந்துகொண்டார். அவர் நாடோறும் விறகு வெட்டிக்கொண்டு போய் நடராஜப் பெருமான் மடைப்பள்ளிக்குக் கொடுத்து வந்தார். இத் திருப்பணியை அவர் ஒவ்வொரு நாளும் அன்போடும் ஊக்கத்தோடும் செய்து வந்தனர். தமது திருப்பணியில் அவர் ஒருநாளும் வழுவியதில்லை. காற்றும் மழையும் கலந்து பெய்தாலும், கடும் வெய்யில் தீய்ந்து காய்ந்தாலும், கொடும்பனி நடுங்கக் கொட்டினாலும் அவர் தமது கடமையைச் செய்வார்.

உண்மை அன்பும் உறுதியும் உடைய இவ்வுத்தமருக்கு அருள்செய்ய வேண்டும் என்று நடராஜ வள்ளல் திருவுளம் கொண்டார். அதனால் அப்பெருமான் அடியவர் கனவிலே தோன்றி உமாபதி சிவாசாரியருக்கு ஒரு திருமுகப் பாசுரம் தந்தருளினர். விழித்தெழுந்த பெற்றான் சாம்பான் என்னும் பெரியார் திருமுகப் பாசுரம் கண்டு பேருவகை அடைந்தார். அவர் அதனை எவ்வாறு உமாபதி சிவாசாரியருக்குச் சேர்ப்பிப்பது என்று கவலை கூர்ந்தார்.

உமாபதி சிவாசாரியரோ அந்தணர்; கொற்றவன் குடியிலே திருமடத்திலே உள்ள பெரியவர்; அவரைக் கல்வி, செல்வம் உடையவரும் கூட நெருங்குதல் அருமை. இவரோ தீண்டாத

வகுப்பைச் சார்ந்தவர். இவர் அவரை அணுக வும் முடியாதே. என்ன செய்வார் பாவம்! அத ஞல் அவர் பெரிதும் வருந்தினர். பின்பு அப் புலைக் குலத்துப் பெரியார் நற்குணம் உடைய ஒருவரை ஓர் உபாயம் கூறும்படி கேட்டுக்கொண் டார். அவர் இவரை நோக்கி, "அப்பா, நீ நட ராஜ சந்நிதியிலே நடத்திவருவது போலவே, கொற்றவன் குடி மடத்திலும் செய்து வருக," என்று சொன்னர். அவ்வாறே பெற்றான் சாம் பான் பல நாள் செய்து வந்தனர். மடத்தார் ஏன் என்று கேட்கவே யில்லை. ஆனல் அவர்கள், இவர் விறகு கொடுக்கத் தொடங்கியது முதல் தாம் விறகு வாங்குவதை நிறுத்திவிட்டனர்.

இவ்வாறு இருக்கையில், பெற்றான் முன் உபாயம் சொல்லிய பெரியவரைக் கண்டு செய்தி கூறினர். அவர், "அப்படியானல் நாளைக்கு மட் டும் விறகு கொண்டுபோய்ப் போட வேண்டாம், மறுநாள் போடலாம்; நடப்பதைப் பார்ப்போம்," என்று சொன்னர். அவ்வாறே பெற்றான் மறு நாள் மடத்துக்கு விறகு கொண்டுபோய்ப் போட வில்லை. அன்று மடத்துக்கு வழக்கமாக வரும் விறகு வராமல் நின்று விடவே விறகு தேடி அமுது செய்ய நேர்ந்தது. அதனல் உமாபதி சிவாசாரியருக்குக் காலம் நீட்டித்துத் திருவமுது வந்தது. அவர் மடப்பள்ளி ஆட்களை அன்று

காலந் தாழ்த்தது ஏன் என்று வினவினர். அவர்கள், நாடோறும் விறகு கொண்டுவருவோர் அன்று கொண்டு வரவில்லை என்று கூறினர்கள். அப்போது அவர் விறகு கொணர்பவர் யார் என்று கேட்டார். அவர்கள் தமக்குத் தெரியாது என்றனர். அதன்மேல் அவர், "அங்ஙனமாயின் நாளை அவர் வந்ததும் நம்மிடம் அழைத்து வருவீராக," என்று அவர்கட்குக் கட்டளை இட்டனர்.

மறுநாள் பெற்ருன் சாம்பான் விறகு கொண்டுவந்து போட்டார். உடனே மடப்பள்ளி ஆட்கள் அவரைப் பார்த்திருந்து, அவ்விடத்திலேயே அவரை நிறுத்தி நோக்கினர். அவர் பஞ்சமகுலத்தவராக இருந்ததால் அவரை எப்படி ஆசாரியரிடம் அழைத்துப் போவதென அவர்கள் தயங்கினர். பின்பு அவர்கள் ஆசாரியரிடம் சென்று, விறகு தந்து வந்தவர் பஞ்சமர் என்பதைக் கூறினர்கள். உடனே உமாபதி சிவனர் அவர் இருக்குமிடம் வந்து அவரை நோக்கி "ஐயா, தாங்கள் என் இவ்வாறு விறகு கொடுத்து வந்தீர்கள் ?" என்று கேட்டார். பெற்ருன் உடனே தம் கையில் இருந்த திருமுகத்தை நீட்டினர். உமாபதியார் அதனை வாங்கிப் படித்தார் ; அளவற்ற ஆனந்தம் கொண்டார் ; கடவுள் திருவருளை எண்ணி நெஞ்சம் உருகினர். பின்பு சிவாசாரியார் அவரை அழைத்துக்கொண்டு

போய் அவருக்குச் செய்ய வேண்டிய கிரியை களை எல்லாம் செய்தார். பெற்றான் சாம்பான் நெருப்பிலே குளித்துச் சிவலோகம் அடைந்தார். எல்லோரும் ஆனந்த பரவசரானார்கள்.

இச் செய்தி எங்கும் பரவியது. பெற்றான் சாம்பான் என்பவர் மனைவிக்கும் இது தெரிந் தது. அவள் மடத்துக்கு வந்து அழுதாள். பின்பு அவள் அரசனிடம் சென்று, தன் கண வனை மடத்தார் உயிருடன் கொளுத்திவிட்டதாக முறையிட்டாள். ஊரார் சிலர், "ஐயோ! பாவம்! விறகுவெட்டி தான் தினந்தோறும் கொடுத்து வந்த விறகை ஒருநாள் கொண்டு வராத படியால் மடத்தார் அவனை உயிரோடு கொளுத்திவிட்டார் கள்," என்று தமக்குள் பேசிக்கொண்டனர். அரச னுக்கும் கிரியா விசேஷத்தினால் ஒருவர் உயி ரோடு மேலுலகம் செல்வது எப்படி என்று தோன்றவில்லை. உமாபதி சிவாசாரியரை வரு வித்து விசாரிப்பதும் நன்றெனத் தோன்றவில்லை. அதனால் அவன் தானே தன் பரிவாரங்களுடன் கொற்றவன் குடிமடத்துக்கு வந்தான்; உமாபதி சிவத்தைக் கண்டு செய்தியைக் கேட்டான். அவர், "அரசே, பெற்றான் சாம்பான் என்னும் பெரிய வர் நடராஜப் பெருமானிடம் இருந்து ஒரு திரு முகப் பாசுரம் எனக்குக் கொண்டுவந்தனர்; அதிற் குறிப்பிட்டபடி அவருக்கு நான் தீக்ஷை செய்ய

அவர் மேலுலகம் அடைந்தனர்," என்றூர். உடனே அரசன் அத் திருமுகத்தைக் கேட்க, அதனை ஆசாரியர் எடுத்துக் கொடுத்தனர். அதிலே பின்வருமாறு ஒரு பாட்டு எழுதப்பட்டிருந்தது.

'அடியார்க் கெளியன்சிற் றம்பலவன் கொற்றங்
குடியார்க் கெழுதியகைச் சீட்டு—படியின்மிசை
பெற்றான்சாம் பானுக்குப் பேதமறத் தீக்கைசெய்து
முத்தி கொடுக்க முறை.'

இதன் பொருள் : அடியார்களுக்கு எளியவனும் திருச் சிற்றம்பலத்திலே உள்ளவனுமாகிய நான், கொற்றங்குடியிலே உள்ள உமாபதி சிவசாரியாருக்கு எழுதிய சிறு சீட்டு யாதெனில் இவ்வுலகத்திலே பெற்றான் சாம்பானுக்குப் புலையன் என்று பாராமல் தீக்ஷை செய்து, முத்தியைக் கொடுக்க வேண்டியது தமக்கு முறைமையாகும் என்பதாம்.

இதனைக் கண்டும் அரசனுக்குத் தெளிவு உண்டாகவில்லை. அதனால் அவன் ஆசாரியரைப் பார்த்து, "ஆசாரியரே, இதனை உலகம் எப்படி ஒப்புக்கொள்ளும்?" என்று கவலையோடு கேட்டான். அப்போது உமாபதி சிவனார் அரசனை நோக்கி, "அரசே, இதோ இருக்கிற முள்ளிச் செடிக்குத் தீக்ஷை செய்கிறேன் ; அது எரிந்து மேலுலகம் செல்வதைத் தாமே நேரில் கண்டு தெளியலாம்," என்று கூறி, உடனே அதனை

நோக்கினர். அது வெந்து சாம்பலாகியது; அதி னின்று ஒரு பரம புருஷன் தோன்றி ஆகாய வழியே சென்றான். அது கண்டு அரசன் முதலா னவர்கள் வியப்படைந்தார்கள்; உமாபதியாரை வணங்கிச் சென்றார்கள். அரசன் பின்பு பெற் றான் சாம்பான் மனைவிக்கு நிரம்பப் பொருள் கொடுத்து, அவள் மனத்தைத் தேற்றி அனுப்பி னான். எவ்வளவு தாழ்ந்த குலத்திற்பிறந்தவரும் செய்கையால் மேன்மையை அடையலாம் என்பது இதனால் ஐயமறத் தெரிகின்றது.

"நல்ல குலமென்றும், தீய குலமென்றும்
சொல்லள வல்லாற் பொருள்இல்லை."

—நாலடியார்

---

## 9. தமிழ் வளர்த்த பெருமாள்

நம்முடைய நாட்டிலே பல சமயங்கள் இருக் கின்றன. இந்து சமயம் என ஒன்று இல்லை. ஆனாலும் கிறிஸ்து சமயம், மகம்மதிய சமயம் ஆகிய இவைகள் நமக்கு வேறாகிய சமயங்களாக இருப்பதால் இந்துக்கள் கைக்கொள்ளும் சம யங்களுக்குப் பொதுவாக இந்து சமயம் என்று பெயர் வழங்கலாயிற்று. இந்து சமயங்களுள் முக் கியமானவை சைவம், வைஷ்ணவம் என்னும் இரண்டு சமயங்களாம். சைவர் சிவபெருமானை முதற்கடவுளாகக் கொள்வார்; வைஷ்ணவர்

விஷ்ணு மூர்த்தியை முதற்கடவுளாகக் கொள்வார். வைஷ்ணவ சமயத்திலே தோன்றிய ஆழ்வார்கள் பன்னிரண்டு பேர்களுள் திருமழிசை ஆழ்வார் என்பவர் ஒருவர். அவருக்குப் பக்திசாரர் என்றும் பெயர். அவர் காஞ்சிபுரத்திலே சிறிது காலம் தங்கியிருந்தனர். அப்பொழுது அவருடைய அனுக்கிரகத்தினுல் பிறந்த கணிகண்ணர் என்பவர் அவரை அடைந்து, அவருக்குப் பணிவிடை புரிந்து வந்தார்.

அக் காலத்திலே வயது முதிர்ந்த கிழவி ஒருத்தி ஆழ்வாருக்கு வேண்டிய பணிவிடைகள் செய்து வந்தாள். அவள் தேவதாசி. ஒருநாள் ஆழ்வார் அவளுடைய தொண்டுக்கு மகிழ்ந்து அவளுக்கு வேண்டிய வரத்தைக் கேட்கும்படி கூறினுர். அவள் உடனே அவரை வணங்கி, "சுவாமி, அடியாளுக்கு இக் கிழத்தனம் நீங்கி யௌவனம் உண்டாகும்படி தேவரீர் அருள் செய்யவேண்டும்," என்று கேட்டாள். ஆழ்வார், "அவ்வாறே ஆகக் கடவது", என்று கடைக்கணித்தார். அதுபோலவே அத்தாசி முதுமைப்பருவம் நீங்கி ஓர் அழகிய மங்கை ஆனுள். அவள் வடிவழகு அனைவர் கண்களையும் கவர்ந்தது.

ஒருநாள் அந்நாட்டுப் பல்லவராஜன் அவளைக் கண்டான்; கண்டவுடன் அவளுடைய அதிசௌந்தரியத்தால் மயங்கினுன்; பின்பு அவளைத்

தன் அரண்மனைக்கு அழைத்துக் கொண்டுபோய் அவளுடன் வாழ்ந்து வந்தான்.

அங்ஙனம் இருக்கையில் பல்லவராஜன் ஒரு நாளைக்கொருநாள் முதுமைப் பருவத்தை அடையலானான். கணிகையோ நாளுக்குநாள் இளமையில் சிறக்கலானாள். இந்த அற்புதத்தைக் கண்ட மன்னவன் ஒருநாள் கணிகையை நோக்கி, "மாதரசி, உனக்கு இத்தகைய இளமை எப்படி உண்டாயிற்று?" என்று வினவினான். அவள் தனக்கு ஆழ்வார் அருள்செய்தபடியை எடுத்துச் சொன்னாள். பின்னும் அவள், "வேந்தே, தங்கள் கோயிலிலே உபாதானம் பண்ண வரும் கணிகண்ணரைக் கொண்டு ஆழ்வாரை அடைந்தால், தங்கட்கும் இத்தகைய இளமை உண்டாகும் என்றனள்." அதுகேட்ட அரசன் கணிகண்ணரைத் தருவித்து, "ஐயா, தேவரீருக்கு ஆசாரியராக உள்ள சுவாமிகளை நாம் சேவிக்கவேண்டும்; ஆதலால் அவரை நம்மிடம் அழைத்துக்கொண்டு வருக," என்றான். அதற்கு அவர், "நம் ஆசாரியர் ஒருவர் அகத்துக்கும் எழுந்தருளார்; அவருக்கு மன்னவரும் ஒரு துரும்பாவர்," என்றார். அதன்மேல் அரையன், "ஆனால் தாங்களாவது நம்மீது ஒரு பாட்டு அருள்செய்ய வேண்டும்," என்றான். அவர் தாம் நரஸ்துதி எப்பொழுதும் பண்ணுவதில்லை என்று மறுத்துக் கூறினர். அரசனுக்குக் கோபம் பிறந்

தது ; உடனே அவன் அவரை நோக்கி, "அப்படியானல் நீர் நமது நாட்டை விட்டு நடப்பீராக," என்ருன். அதற்குக் கணிகண்ணர், "அப்படியே செய்வேன்," என்று சொல்லிவிட்டுச் சடக்கெனப் புறப்பட்டுப் போனர்.

போனவர் ஆழ்வார் திருமுன்பு சென்று, தண்டம் சமர்ப்பித்து, நடந்த செய்திகளைச் சொல்லி, "அடியேன் விடை பெற்றுக்கொள்ளுகிறேன்," என்ருர். அது கேட்டுப் பக்திசாரர், "அப்படியானல் நாமும் இங்கிருக்க மாட்டோம். உம் முடனேயே வருகின்ருேம் ; நாம் சென்ருல் நம் பெருமாளும் இங்குக் கண்வளர்ந் திருப்பனே ?" என்று சொல்லிவிட்டுத் திருவெஃகாவிலே திருக்கண்வளரும் பெருமாளை நோக்கி,

"கணிகண்ணன் போகின்ருன் காமருபூங் கச்சி
மணிவண்ணு நீகிடக்க வேண்டா - துணிவுடைய
செந்நாப் புலவனும் செல்கின்றேன் நீயும்உன் றன்
பைந்நாகப் பாய்சுருட்டிக் கொள்."

என்ருெரு பாட்டைப் பாடினர். அப்படியே பெருமாளும் நாகணையைச் சுற்றிக்கொண்டு அவரைப் பின் தொடர்ந்து சென்ருன். பெருமாள் எழுந்தருளுவதைக் கண்ட மற்றத் தேவர்கள் எல்லாரும் அவனைப் பின் தொடர்ந்து சென்றனர். மரங்கள் எல்லாம் வாடின ; குளங்கள் வற்றின ; எங்கும் இருள் மூடியது. காஞ்சிமாநகரம் பொலி

வழிந்தது. அரசனும் மந்திரிகளும் இந்த அலங் கோலத்தைக் கண்டு மிகவும் வருந்தி ஆழ்வாரைத் தேடிப் பார்க்கலாயினர்.

அப்பொழுது ஆழ்வார் காஞ்சியை விட்டு அருகேயுள்ள ஓர் ஊரிலே தங்கினர். அவ்வி டத்தை அரசன் முதலானவர்கள் கண்டுபிடித்துக் கணிகண்ணர் திருவடிகளில் விழுந்து வேண்டிக் கொண்டனர். அவர் ஆழ்வாரை வேண்டிக் கொண்டனர்; ஆழ்வார் மீண்டு எழுந்தருளத் திருவுளங் கொண்டு பெருமாளை நோக்கி,

"கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங் கச்சி
மணிவண்ணா நீகிடக்க வேண்டும்-துணிவுடைய
செந்நாப் புலவன்யான்செல்லொழிந்தேன் நீயுமுன்றன்
பைந்நாகப் பாய்படுத்துக் கொள்."

என்று பாடினர். அப்படியே பெருமாள் அவர் தமிழ்ப்பாட்டின் சுவையை விழைந்து அவருடன் கச்சிக்கு எழுந்தருளினன். அரசன் முதலானவர் கள் ஆழ்வாரையும் பெருமாளையும் வணங்கித் தந் தம் இருப்பிடங்களுக்குச் சென்றனர். அன்று முதல் பெருமாளுக்குச் சொன்னவண்ணஞ் செய்த பெருமாள் என்றும் அவர் ஓர் இரவு தங்கிய ஊருக்கு ஓரிரவிருக்கை (ஓர்+இரவு+இருக்கை) என்றும் பெயர் உண்டாயின.

———

## 10. வாழ்க்கை நிலை

நமது வாழ்க்கையை முன்னோர் நான்கு வகையாகப் பிரித்தனர். அவை பிரமசரியம், கிருகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் என்பன. இவற்றிற்கு ஆச்சிரமம் என்று பெயர் ; ஆச்சிரமம் என்ற சொல்லுக்குத் தமிழில் நிலை யென்று பொருள். இந்நிலையிலும் ஒவ்வொருவரும் அததற் கேற்றவாறு ஒழுகுதல்வேண்டும். இவை படிப்படியாய் ஒருவன் அறிவு, ஒழுக்கங்களால் உயர்ந்து கடவுள் திருவருளைப் பெறுவதற்குத் துணை செய்யும். இவற்றை இக்காலத்தில் கூடுமானவரையில் மேற்கொள்ளலாம்.

முதலாவது பிரமசரிய நிலை என்னும் மாணவர் வாழ்க்கை. அக்காலத்தில் மாணுக்கர் நடந்துகொள்ள வேண்டிய முறையைக் கேட்டால் இக்காலத்து மாணவர்களான நீங்கள் நடுங்குவீர்கள். பிரமசாரி இரவில் உண்ணல் கூடாது ; எண்ணெய் இட்டுக் கொள்ளலாகாது ; சந்தனம் பூசலாகாது ; தாம்பூலம் தரிக்கலாகாது ; ஐம்புலன்களையும் அடகல் வேண்டும். அவன் குருவினிடத்தில் அடங்கி ஒடுங்கி நூல்களை ஓதல் வேண்டும் ; அவருக்குப் பணிவிடை செய்ய வேண்டும் ; சடையை வளர்த்தல் வேண்டும் ; தரையிற் படுத்தல் வேண்டும் ; பிச்சை எடுத்துப் புசிக்கவேண்டும்; பூணூல் தரிக்க வேண்டும் ; தண்டம் கைக்

கொள்ள வேண்டும். இவ்வாறாகப் பல ஆண்டுகள் அவன் பிரமசரியங் காத்த பிறகு ஒரு பெண்ணை மணம் புரிந்துகொண்டு கிருகஸ்தாச்சிரமத்தைக் கைக்கொள்ள வேண்டும்.

இரண்டாவது, கிருகஸ்தன் என்னும் இல்லறத்தான். இவன் தன் குலம், குடி, கோத்திரம் முதலியவற்றிற்குத் தக்கவளாகவும் குணமுடையவளாகவும் உள்ள ஒரு மங்கையை மணம் செய்து கொள்ள வேண்டும். இல்லறத்தானே எல்லாரையும் காப்பாற்றக் கடமைப்பட்டவன். அவன் பிதிரர்கடன், தெய்வபூஜை, விருந்தோம்பல், சுற்றந் தழுவல் முதலிய ஒழுக்கங்களில் வழுவாமல் இருக்கவேண்டும்; தாய் தந்தையரை ஒவ்வொரு நாளும் வணங்கவேண்டும்; வயது முதிர்ந்தவர், குழந்தைகள், பெண்கள், நோயாளிகள் என்னும் இவர்களுக்கு உணவு, உடை முதலியன தந்து பாதுகாக்கவேண்டும்; பொய் சொல்லுதல், கள் குடித்தல், திருடுதல் முதலிய பாவச் செய்கைகளைச் செய்யலாகாது; தன்னுயிர் போல மன்னுயிரை எண்ண வேண்டும்; தான தருமங்களைச் செய்யவேண்டும்; இரவில் தயிர் உண்ணலாகாது; பகலில் பால், வெண்ணெய் அருந்தலாகாது; இருட்டிலே தனித்துப் போகக் கூடாது; கையால் ஜலபானம் செய்யக் கூடாது; இந்திர வில்லைப் பார்க்கக் கூடாது; தூங்குகிறவர்களை இடையிலே எழுப்பக்கூடாது;

பகலிலே தூங்கக்கூடாது; காலை வெய்யி லில் காயக்கூடாது; வீட்டிலே மயிர் கழித் தல், விரித்த தலையோடிருத்தல், பிறர் ஆடையை உடுத்தல், குளித்த பிறகு கையால் துடைத்தல் முத லிய செய்கைகளைச் செய்யக்கூடாது; தன் மனை விக்கு வந்த சீதனப் பொருளை உயிர் போனாலும் பிறருக்குக் கொடுக்கலாகாது; தீயகனாக் கண்டால் நீராட வேண்டும். மனைவியை மிகவும் அன்புட னும் பெருமையாகவும் நடத்தல் வேண்டும். மக் களிடத்தில் அன்பும் இன்சொல்லும் உடையவ னாக இருத்தல் வேண்டும்.

மூன்றுவது வானப்பிரஸ்தம் என்னும் காட்டு வாசம். இல்லறத்தான் தன்னுடைய உடம்பிலே நரை தோன்றியவுடனாதல் அல்லது பிள்ளைக் குப் பிள்ளை பிறந்தவுடனாதல் வானப் பிரஸ்தாச் சிரமத்தைக் கைக்கொள்ளவேண்டும்; மனைவிக்கு விருப்பம் இருப்பின் அவளை உடன் அழைத் துக்கொண்டும் போகலாம்; இல்லாவிட்டால் அவ ளைத் தன் மகனிடத்தில் ஒப்புவித்து விட்டுச் செல்லவேண்டும். ஒவ்வொரு நாளும் ஐம்பெரும் வேள்விகளைச் செய்யவேண்டும். ஐம்பெரும் வேள்விகள் இவை என்பதைப் பற்றிப் பின்னர்க் கூறுவேன். வானப் பிரஸ்தன் மரவுரி தரித்துக் கொள்ளவேண்டும்; சடை, மீசை, தாடி, நகம் இவைகளை வளர்க்க வேண்டும்; இரு சந்தி

களிலும் தலைமுழுக வேண்டும்; குளிர், வெய்யில், சுகம், துக்கம் இவைகளைப் பொறுத்துக்கொள்ள வேண்டும்; காய், கிழங்கு முதலியவற்றை உண்ண வேண்டும்; பழத்தேனை அன்றி ஈத்தேனை உண்ணலாகாது; ஒருவேளை மட்டும் அன்னம் கொள்ளல் வேண்டும்; உயிர்களுக்கு எத்தகைய துன்பமும் செய்யலாகாது.

நான்காவது சந்நியாசம் என்னும் துறவு நிலை. துறவி எல்லாவற்றையும் துறந்து, கடவுளிடத்திலே உள்ளத்தை வைத்து இருத்தல்வேண்டும். சென்றவற்றைப் பற்றிச் சிந்திக்கலாகாது; இனி வருவதையும் எண்ணலாகாது; தைல தாரை போல எப்பொழுதும் இடைவிடாது ஞான நிலையிலேயே இருத்தல் வேண்டும்.

---

## 11. காவிரி வரலாறு

நெடுங்காலத்துக்கு முன் கவேரன் என்னும் இராஜரிஷி ஒருவன் இருந்தான். அவன் அருந்தவம் புரிந்து காவேரி என்னும் அழகிய நங்கையைப் புதல்வியாகப் பெற்றான். அவள் நதி உருவத்தை அடைந்தாள். அவளை அகத்தியர் தமது கமண்டலத்திலே அடக்கிக்கொண்டு, சையமலைக்கு வந்து சேர்ந்தார். அப்போது தேவேந்திரன் சீகாழியிலே சிவபெருமான் பூசனையின்

பொருட்டு ஒரு நந்தவனம் வைத்து வளர்த்தான். அவன் அவ்வனத்தை மிகவும் கண்ணுங் கருத்துமாய்ப் பாதுகாத்து வந்தான்; அங்கே மலரும் பூக்களை இறைவன் திருவடியிலே சூட்டி இன்புறுவான்.

இந்திரன் இவ்வாறு இருக்கும் நாட்களில் மழைபெய்யாமல் ஒழிந்தது. உலகமெங்கும் தண்ணீர் இல்லாப் பஞ்சம் ஏற்பட்டது. சீகாழியிலே இந்திரன் நந்தவனம் தண்ணீர் இன்மையால் காய்ந்துபோய்விட்டது. அது கண்டு அவன் மிக்க கவலைகொண்டான். அப்பொழுது ஓர் அசரீரி வாக்கு இந்திரனை நோக்கி எழுந்தது. அது அவனை, "அஞ்சவேண்டாம்; பெருமை பொருந்திய நதி வரும்; பூசனை இன்று செய்," என்று உரைத்தது. அதைக்கேட்ட இந்திரன் மகிழ்ந்திருந்தான்.

சிறிது நேரத்திற்கெல்லாம் யாழிலே வல்லவரும் தெய்வ முனிவரும் ஆகிய நாரதர், இந்திரனிடம் வந்தார். அவரை இந்திரன் வரவேற்றுத் தனது குறையை விண்ணப்பித்தான். அவர் உடனே அவனை நோக்கி, "தேவேந்திரனே, அகத்திய முனிவர் காவேரியைக் கமண்டலத்திலே கொண்டுவந்து சையமலையிலேயே எழுந்தருளி இருக்கிறார்," என்றார். அதற்கு இந்திரன், "முனிவரே அந்நீர் இங்கே வருதல் எப்படிக்கூடும்?

அருள், செய்வீராக," என்று கேட்டான். நாரதர், "விநாயகரை அன்போடு வழிபட்டாயானல் அவர் உனது குறையை ஒழித்தருளுவார்," என்று மறு மொழி கூறினர். அதன்மேல் இந்திரன் விநாயகரைப் பூசை செய்து, மனமுருகி வேண்டினன்.

அவர் அருள் சுரந்து அவன் எதிரே தோன்றி, "நீ விரும்பியது யாது? அஞ்சாமற் சொல்?" என்று கேட்டனர். இந்திரன், "முதற் கடவுளே, அடியேன் சிவபெருமானைப் பூசிக்க ஒரு நந்தவனம் அமைத்தேன்; அது மழை இன்மையால் வாடி வதங்குகிறது; அதைப் பார்க்குந் தோறும் என் உள்ளம் வருந்துகிறது; இப்பொழுது அகத்தியர் காவிரியைக் கமண்டலத்திலே கொணர்ந்து சையமலையில் இருக்கின்றார். அதனை இங்கு வரும்படி அருள்புரியவேண்டும்," என்று கூறி வணங்கினன். விநாயகர், "அங்ஙனமே ஆகுக!" என்று அருள் வழங்கி மறைந்தார். பின்னர், விநாயகப் பெருமான் காக வுருக் கொண்டு அகத்தியர் வைத்திருந்த கமண்டல நீரை அவர் அறியாமல் உருட்டிவிட்டார். அது உருண்டு ஆறாக ஓடியது. உடனே பெருமான் ஒரு சிறுவனாக வடிவெடுத்து நின்றார்.

அப்போது அகத்தியனார், "யார் இவன்? காக உருவங்கொண்டு கையில் இருந்த கரக நீரைக் கவிழ்த்தான்," என்று கோபங்

கொண்டு தமது கையைக் குவித்துக்கொண்டு அச் சிறுவனை அடிக்க அவனிடம் சென்றார். அவன் ஓடத் தொடங்கினான். முனிவர் அவனுடன் ஓடினார். சிறுவன் விளையாட்டுக் காட்டி ஓடினான். முனிவர் கோபம் மிகுந்து எப்படியேனும் அவனைப் பற்றிக் குட்டவேண்டும் என்று எண்ணி அவனோடு ஓடித் திரிந்தார். சிறுவன் கிட்ட வருவான் ; பிடிக்கச்சென்றதும் எட்டி ஓடுவான் ; எட்டினால் மீண்டும் முனிவர்முன் தாவுவான் ; பின்பு அவரைத் தன்னைத் தொடர ஏவுவான் ; விரைந்து ஓடுவான் ; நிற்பான் ; மேலே பாய்வான். இவ்வாறு செய்யச் செய்ய முனிவரும் கோபம் பொங்கப் பொங்க ஓடி இளைத்து வருந்தினார்.

உடனே சிறுவனாக இருந்த பெருமான் தனது உண்மை வடிவுடன் அகத்தியருக்குக் காட்சி தந்தார். அகத்தியர் அவரைக் குட்டுதற்கு முகிழ்த்த கைகளால் தம்மைக் குட்டிக்கொண்டு தோப்புக்கரணம் போட்டார். விநாயகர், பிறகு, “ உனக்கு வேண்டுவது யாது?” என்று அவரைக் கேட்க, அந்தணர், “ அருட்கொழுந்தே, அடியேன் பொதியமலைக்குச் சென்று சிவபூசை செய்யக் காவேரியாற்றைக் கொண்டு செல்கின்றேன் ; அதனைத் தேவரீர் இப்படிக் கவிழ்த்து விட்டீர்களே ! என்ன செய்வேன் ?” என்றார். கணபதி அவரை நோக்கி, “அஞ்சவேண்டா ; இந்திரன்

நந்தவனம் செழிக்கும் பொருட்டு அவ்வாறு செய்தோம்; உனக்கும் யாதொரு குறைவும் இல்லை," என்று கூறி ஓடும் நீரிற் சிறிது அள்ளி அக்கமண்டலத்திலே இட்டு அதனை நிரப்பினர். அகத்தியனாரும் உள்ளம் குளிர்ந்து, பெருமான் திருவருளை வழுத்திப் பொதிய மலையை நோக்கிச் சென்றார்.

---

## 12. அறம் வளர்த்த செல்வி

ஒருகாலத்தில் கைலாய மலையின்கண் சிவபெருமானும் உமாதேவியாரும் எழுந்தருளியிருந்தனர். அப்போது அம்மையார் பெருமானைப் பல வினாக்களைக் கேட்டுக்கொண்டே வந்தனர்; அவரும் அவற்றிற் கெல்லாம் அன்போடு விடையளித்து வந்தார். கடைசியில் பிராட்டியார் சிவபெருமான் திருவடிகளை வணங்கி, "ஐயனே, நான் உலகத்திற் சென்று, அறங்கள் பலவற்றையுஞ் செய்ய விரும்புகிறேன்," என்று மெல்லென மொழிந்தனர். அதற்குக் கண்ணுதல், "உமையே, அறம் செய்து நீ உலகத்துக்குக் காட்ட வேண்டியதுதான்; ஏனென்றால் அறத்தின் உண்மை இன்னதென்றே தெரிந்து கொள்ளாமல் பலர் அறம் செய்கின்றனர்; அதனால் அவர்கள் அறத்தின் பயனை இழக்கின்றனர்; சிலர் குளிக்கப் போய்ச் சேற்றைப் பூசிக் கொள்வது

போலத் தருமஞ் செய்யத் தொடங்கிப் பாவத்தை யும் தேடிக்கொள்கின்றனர்,'' என்றனர்.

அப்போது அம்மையார் இறைவனை நோக்கி, “ அருட் கடலே, அன்பின் பிழம்பே, அறம் எவ்வாறு செய்யவேண்டும்? அதனைத் தேவரீர் அடியாளுக்கு அருள் செய்யவேண்டும்,'' என்று வணங்கிக் கேட்டுக்கொண்டனர். சிவ பெருமான் அம்மைக்குப் பின்வருமாறு சொல் லத் தொடங்கினர்: உலகத்திலே மக்களாகப் பிறந்தவர் அடையவேண்டிய பொருள்கள் நான்கு. அவை அறம், பொருள், இன்பம், வீடு என்பன. அறம் என்பது தருமம். அஃதாவது ஒவ்வொருவனும் அறிவு தோன்றிப் படிக்கத் தொடங்கும் மாணக்கனுக இருப்பது முதல் இறக்கும் வரையில் தனக்கும் பிறர்க்கும் செய்து வரும் கடமைகளாம்; பொருள் என்பது நல்ல வழியில் பிறரை வருத்தாமலும் ஏமாற்றுமலும் தேடும் செல்வம்; இன்பம் என்பது ஒருவன் தனது வாழ்நாளில் தான் செய்துவரும் தருமத் தினுலும் பிறரிடம் அன்பு செய்வதினுலும் அடையும் மனமகிழ்ச்சி; வீடு என்பது கடவு ளுடைய அன்பு ஒன்றையே கொண்டு, உலகப் பற்றை விட்டுவிட்டு இருப்பதாம்.

“இந்நான்கினும் அறமே முதலாவதாக உள்ளது; இதுவே மற்ற மூன்றையும் தர

வல்லது. தருமத்தைக் கைவிட்டால் எல்லாவற்றையும் இழக்கவேண்டும்; தருமத்தை மனத்தால் செய்யலாம்; வாக்கால் செய்யலாம்; காயத்தாலும் செய்யலாம். அதற்குப் பொதுவாக ஒரு காலம் வேண்டாம்; இடமும் வேண்டாம்; எவ்விடத்தும் எப்பொழுதும் தருமம் செய்யலாம்.

"முதலாவது அறம், மனம் குற்றமில்லாமல் இருத்தலாம். மனத்திலே பொருமை, பிறருக்குத் தீமை செய்யும் விருப்பம் முதலான குற்றங்கள் உடையவன் செய்யும் அறம் அவனுக்கு ஒருகாலும் நன்மை தரமாட்டாது. குற்றமில்லாத மனம் உடைமையே எல்லா அறத்தினும் பெரியதாம்.

"இரண்டாவதாகத் தருமம் செய்கின்றவர் கடுஞ் சொற்கள் சொல்லாமல் முகமலர்ச்சியோடும் இன்சொல்லோடும் எந்த அறத்தையும் செய்ய வேண்டும். சிலர் தருமம் செய்யும்போது நாய் போல மேலே விழுகிருர்கள்; சிலர் அன்னதானம் செய்யும்போது சவுக்கெடுத்து அடித்துப் போஜனத்துக்கு வருபவர்களை அடக்குகிருர்கள். இவைகளால் புண்ணியத்துக்குப் பதில் பாவம் தான் வளரும்.

"தருமம் என்னுடைய வடிவம்; உண்மை அறம் எங்கே இருக்கிறதோ அங்கே நான் இருக்கிறேன்; உண்மைத் தருமவான் உள்ளத்திலே நான் கோயில்கொண் டிருக்கிறேன். ஆதலால்

அந்தத் தருமம் எந்த வகையாலும் சிதைய லாகாது. நான் எறும்புமுதல் யானை ஈருக உள்ள எல்லா உயிர்களுக்கும் தந்தையாக இருக்கிறேன்; எனக்கு எல்லாரிடத்தும் அன்பு ஒன்ருக இருக் கிறது. அதுபோலவே தருமம் அனைவருக்கும் பொதுவாக இருக்கவேண்டும். சிலர் ஒரு சத்திரத் தைக் கட்டி அதைத் தங்களுடைய ஜாதியா ருக்கு மட்டும் கொடுத்துக்கொண்டு வருகிருர்கள்; சிலர் ஒரு ஜாதியாருக்கு மாத்திரம் உணவளிக் கிருர்கள்; சிலர் வேண்டுதல் கடிதம் கொண்டு போனுல்தான் தமது சத்திரத்திலே இடந் தருகி ருர்கள்; இவையெல்லாம் தருமங்கள் ஆகா. எனக்கு எப்படிக் குலம், கோத்திரம், சூத்திரம் முதலான ஒன்றும் இல்லையோ அதுபோலவே தருமத்துக்கு இவை ஒன்றும் இல்லை. தருமம் செய்பவர் உள்ளம் தூய்மையாய்ப் பரந்து விரிந்து கிடக்கவேண்டும்; அவர் எல்லா உயிர்க ளிடத்தும் அன்பு பாராட்டவேண்டும். பசி, பிணி என்பவை எல்லாரையும் ஒன்ருகவே வருத்து கின்றன; இவை உயர்ந்தவர்களை மட்டும் வருத்தி எளியவர்களை வருத்தாமல் விடுவதில்லை. இவற்றை யெல்லாம் நன்கு கவனித்து நீ அறம் வளர்ப்பாயாக.”

இவ்வினிய மொழிகளைத் தேவியார் காது குளிரக் கேட்டார். அவர் நெஞ்சம் அறம் செய்ய

விரைந்தது ; அவர் திருக்கண்களில் ஆனந்தபாஷ்பம் சொரிந்தது ; அவர் அழகிய முகம் புத்தம் புதிய செந்தாமரை மலரைப்போலத் திகழ்ந்தது. அப்போது அம்பிகை, "நச்சினார்க் கினியாய், நான் இப்பொழுதே அறஞ்செய்யச் செல்வேன் ; அதற்கு ஓரிடத்தைக் குறிப்பிடுக ; அவ்விடத்திலே எல்லா அறங்களையும் நான் செய்து காட்டுகிறேன் ; எனக்கு மிக்க பொருளை வழங்குக," என்று கேட்டார்.

அதற்குச் சிவபெருமான், "பெண்ணரசே, நான் மிக்க பொருளை வழங்க முடியாது ; அப்படி வழங்குவதனால் உனக்கு நன்மை இல்லை. நான் இப்போது இரண்டு நாழி நெல் கொடுக்கிறேன். இதனைக் கொண்டுபோய் நீ அறம் வளர்ப்பாயாக," என்று அவருக்குக் கூறி இரண்டு நாழி நெல்லைத் தந்து அனுப்பினார்.

அம்பிகை அம்மையார் அந்நெல்லைப் பெற்றுக்கொண்டு அண்ணலாரை நோக்கி, "ஆருயிரே இதனைக்கொண்டு நான் எப்படி அறஞ்செய்வேன்? அதற்குத் தேவரீரே வழி சொல்ல வேண்டும்," என்று கேட்டார். அது கேட்ட சிவனார், "கண்மணீ, நீ இந்த நெல்லைக் கொண்டுபோய், உழவர்களிடத்துக் கொடுத்துப் பெருக்கிப் பின் அறஞ்செய்க. நீ இப்போது இடம் ஒன்றைத் தேர்ந்து கொள்ள வேண்டுவதுதான். தொண்டை நாட்

டிலே மிகச் சிறந்து விளங்கும் காஞ்சிமா நகரத்துக்குச் செல். அது நகரங்கள் எல்லாவற்றிலும் மேன்மையானது. உன்னுடைய நல்லெண்ணம் இனிது நிறைவேறுக," என்றருளிச்செய்து அனுப்பினர்.

உமாதேவியார் இறைவனிடம் விடை பெற்றுக் கச்சியம்பதியை அடைந்து, அங்கேயிருந்த வேளாண்மக்களை அழைத்து, இரண்டு நாழி நெல் அவரிடம் தந்து, அதனைப் பெருக்கச் சொற்றனர். அவ் வேளாளர்கள் மிகவும் அன்போடு அந்நெல்லைப் பயிரிட்டு அதனைப் பெருக்கினர்கள். பிறகு தேவியார் அப்பெரும் நெல்லைக் கொண்டு, அறங்களை வளர்த்தனர். அன்று முதல் அம்மையார்க்கு அறம் வளர்த்த செல்வி என்று பெயர் வழங்கலாயிற்று.

அவர் சாலைகளை அமைத்தனர்; ஓதுவார்க்கு உணவு விடுதிகளை ஏற்படுத்தினர்; பசுவிற்கு வாயுறைதரும் பசு மடங்களை உண்டாக்கினர்; தின்பண்டம் உண்ண இயலாதாருக்குத் தீம்பண்டங்கள் செய்வித்துத் தந்தனர்; குழவிகட்குப் பால் கொடுத்து வளர்த்தனர்; அனைவருக்கும் உணவு அளித்தனர்; நோய்க்கு மருந்து அளித்தனர்; கடன்பட்டவரை அதினின்று விடுவித்தனர்; தண்ணீர்ப்பந்தர் வைத்தனர்; மடங்கள் கட்டினர்; குளங்களை வெட்டினர்; ஆங்காங்கு

ஆவுரிஞ்சு தறிகளை நிறுத்தினர்; பறவைகட்குத் தானியம் தெறித்தனர்; எறும்புகட்கு நொய் வைத்தனர்; பாம்புகட்குப் பால் வார்த்தனர்; மரம் செடிகளுக்கு நீர்ப்பாசனம் செய்தனர்.

பாட்டு

மாயன் வணங்கியுன் மால்வடி வங்கொள வாடும் அரன்துயர் போ [தாதோ
தூய மதன்தொழ ஆண்வடி வம்புணர் தோகைகண் வண்டயில் [தேனேபோல்
மேய வழங்கும் உருபம தென்சொல மேலிது கண்டவர் வாழ்வாரோ
நீ அதிரஞ்சகி மோகன வஞ்சகி நீ செய்வ தொன்றல மாதாவே. (க)

ஆநந்தலகரி, கவிராசபண்டிதர்.

தருணமங்கலை உனது சிந்தை தழைத்த பாலமுதூறினால்
அருணகொங்கையில் அதுபெருங்கவி அலைநெடுங் கடலாகுமே
வருண நன்குறு கவுணியன் சிறுமதலை அம்புயல் பருகியே
பொருள்நயம் பெறுகவிதை என்றொரு புனிதமாரி பொழிந்ததே.(உ)

சௌந்தரியலகரி கவிராசபண்டிதர்.

ஆத்தாளை எங்கள் அபிராம வல்லியை அண்டமெல்லாம்
பூத்தாளை மாதுளம் பூநிறத் தாளைப் புவி அடங்கக்
காத்தாளை அங்குச பாசாங் குசமுங் கரும்பும் அங்கை
சேர்த்தாளை முக்கண்ணியைத் தொழுவார்க்கொரு தீங்கில்லையே.(ங)
நன்றே தருகினுந் தீதே விளைகினும் நான் அறிவது
ஒன்றேயும் இல்லை உனக்கே பரம்எனக் குள்ளஎல்லாம்
அன்றே உனதென் றளித்துவிட்டேன் அழியாதகுணக்
குன்றே அருட்கடலே இமவான் பெற்ற கோமளமே. (ச)
தனந்தருங் கல்வி தருமொரு நாளுந் தளர்வறியா
மனந்தருந் தெய்வ வடிவுந் தருநெஞ்சில் வஞ்சம்இல்லா

இனந்தரும் நல்லன எல்லாந் தரும்அன்பர் என்பவர்க்கே
கனந்தரும் பூங்குழ லாள் அபி ராமி கடைக்கண்களே. (ரு)
அபிராமி அந்தாதி, அபிராமிபட்டர்.

மூவர்க்கும் முதற்பொருளாய் முத்தொழிற்கும் வித்தாகி
நாவிற்கும் மனத்திற்கும் நாடரிய பேரறிவாய்த்
தேவர்க்கும் முனிவர்க்குஞ் சித்தர்க்கும் நாகர்க்கும்
யாவர்க்குந் தாயாகும் எழிற்பரையை வணங்குவாம். (சு)
பதிபசுபாச விளக்கம்.

சொற்பொருளும் உடலுயிருஞ் சுடரொளியும் விரைமலருஞ் சுவை
[யும்பாலும்
நிற்குநிறை வெனக்கலந்து சிவத்தில்அநந்யாயமாகி நிலவும் அண்
[டம்
பற்பலவும் படைத்தளிக்குந் தாயாகி வினைச்சமமாம் பருவந் தோன்
[றும்
சிற்பரையைத் தில்லைநகர்ச் சிவகாம சவுந்தரியைச் சிந்தை சேர்ப்
[பாம்.
திருத்தணிகைப் புராணச் சுருக்கம்.

---

## 13. ஐவகை வேள்வி

வேள்வி என்பது விரும்பிச் செய்யப்படுவது என்று பொருள்படும். வேள்வி என்பதற்கு வடமொழியில் யக்ஞம் என்று பேர்; அது திரிந்து யாகம் என்றும் வழங்கும். வேள்விகளில் எத்தனையோ பிரிவுகள் உண்டு. இப்பொழுது ஒவ்வொருவரும் நாடோறும் நியமமாய்ச் செய்ய வேண்டிய ஐவகை வேள்வியைப் பற்றிச்

சொல்லுவேன். நம்முடைய வாழ்க்கை ஒரு நெறியாய் நடைபெறல் இன்றியமையாத தாகும். இல்லாவிட்டால் நாம் ஒரு காரியத்தையும் சாதிக்க முடியாது. அத்தகைய நெறியை இவ்வேள்விகளைச் செய்து வருவதால் நாம் அடையலாம். இவற்றைச் செய்யாவிட்டால் நாம் நமது கடமைகளில் வழுவினர்களும் ஆவோம். ஐவகை வேள்விகளாவன: பிரமயாகம், தெய்வ யாகம், பிதுர்யாகம், பூதயாகம், மனுஷயாகம் என்பவைகளாம்.

பிரமயாகம் என்பதற்கு வேதயாகம், ரிஷியாகம் என்றும் வேறு பெயர்கள் உண்டு. இது, வேதம் ஓதுதலும் பிறருக்கு ஓதுவித்தலும் ஆகும். நம் முன்னோர் நமக்கு இதைக் கடமையாக ஏற்படுத்தியிருக்கின்றனர். ஒவ்வொருவரும் ஓதாமல் ஒரு நாளும் இருக்கலாகாது. அப்படியே தமக்குத் தெரிந்ததைப் பிறருக்குக் கற்பிக்க வேண்டும். கல்வி, 'பலநாள் ஓதி ஒரு நாள்விடத் தீரும்' என்பது பழமொழி. கல்வி கரையற்ற கடலைப் போல விரிந்துளது; அது எத்தனையோ துறைகளை உடையது. ஆகையால் ஒவ்வொருவரும் சிறந்த நூல்களை இடைவிடாமல் ஓதுதல் வேண்டும். இங்கே வேதத்தையே சிறப்பாகக் கொண்டாலும் பிற நூல்களையும் பொதுவாக வைத்துக் கொள்ளலாம். ஒருவன் பிறருக்குக்

கற்பிப்பதனுல் தனது கல்வி வளர்வதுடன் அறமும் வளர்கிறது. ஆதலால் இது முதலாவது கடமையாக இருக்கிறது.

இரண்டாவது தெய்வயாகம். இஃது ஓமம் வளர்த்தலாம். இது தேவர்களுக்குச் செய்யப்படுவது. தேவர்கள் எல்லா உலகங்களுக்கும் தலைவராக இருத்தலின் அவருக்கு நமது கடமையைச் செலுத்தவேண்டும். ஆதலால் ஓமம் வளர்த்துத் தேவப் பிரீதி செய்யவேண்டும். ஓமம் வளர்த்த இயலாதவர்கள் பூசை செய்தலும், திருக்கோயில் வழிபாடு செய்தலும், வாயால் வாழ்த்துதலும் செய்ய வேண்டும்.

மூன்ருவது பிதுர்யாகம் என்பது. இது தர்ப்பணஞ் செய்தலாம். பிதுரர் என்பவர் உலகம் படைக்கப்பட்ட காலத்தில் பிரமனுல் படைக்கப்பட்ட கடவுட்சாதியார். அவர்களுடைய இடத்திற்குப் பிதுர் லோகம் என்று பெயர். இறந்து போன நமது முன்னோர்கள் நாம் அவரை நோக்கிச் செய்யும் கிரியைகளால் பிதுர் லோகத்தை அடைகிருர்கள். ஆகையால் நாம் நமது தந்தையாருக்கும் முன்னேருக்கும் செய்ய வேண்டிய கடமையை இந்த வேள்வியினுல் செய்கிருேம். பிதுர்லோகம் தெற்கே இருப்பதால் அவர்கட்குச் செய்யும் சடங்குகள் தெற்கு நோக்கியே செய்யப்படுகின்றன; அதனுல் அவர்கட்குத் தென்புலத்

தார் என்றும் பேருண்டு. பிதுர்கடன் மிகவும் சிரத்தையுடன் செய்யப்பட வேண்டும். அதனுல் அதற்குச் சிரார்த்தம் என்று காரணப் பெயர் உண்டு. அன்று நம் வீட்டில் வரும் எறும்பும் உண்ணலாகாது என்னும் கொள்கையினுல் அரிசி மாவினுல் இடும் கோலத்தையும் நாம் இடுவ தில்லே. பிதுர் கருமம், தந்தை, பாட்டன், பூட் டன் ஆகிய மூன்று தலேவரையில் செய்வது வழக்கம். இறந்துபோன நாளில் செய்வதால் இதற்குத் திவசம் (நாள்) என்றும் திதியில் செய் யப்படுவதால் திதி என்றும் பெயர்கள் வழங்கு கின்றன.

நான்காவது பூதயாகம் என்பது பலி யீத லாம். நாம் பலவகைப்பட்ட விலங்குகளுக்கும் பறவைகளுக்கும் மற்றப் பிராணிகளுக்கும் பயன் படும்படி நான்கு பக்கங்களிலும் உணவை வைத் தல் வேண்டும். அன்றியும் நோயாளிகட்கும், தாழ்ந்த குலத்தவர் என்று எண்ணப்படுவோர் களுக்கும் உணவு அளித்தல் வேண்டும். இதனுல் நாம் நம்மைச் சூழ்ந்த பிராணிகளேயும் காப் பாற்ற வேண்டும் என்னும் கடமை உறுதிப்படு கிறது.

ஐந்தாவது மனுஷயாகம் என்பது இரப் போர்க்கு அளித்தலாம். இதில் விருந்தினருக்கு அன்னம் அளித்தல், ஏழைகட்கு உதவிசெய்தல்,

மாணுக்கர்களுக்கு உணவு தருதல் முதலான பரோபகாரச் செயல்கள் எல்லாம் அடங்கும். இதனுல் நாம் பிற மக்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகள் விளங்குகின்றன.

இத்தகைய ஐவகை வேள்விகளையும் ஒருவன் தனது இயல்புக்கு ஏற்றவாறு ஒவ்வொரு நாளும் செய்து வருவானுயின், அவன் புகழும் புண்ணியமும் அடைவான் என்று நாம் சொல்ல வேண்டுமோ? இவற்றை இக்காலத்துக் கேற்றபடி மாற்றி அமைத்துக் கொள்ளலாம். இந்துக்களுடைய தருமம் எவ்வளவு சிறப்பாக இருக்கின்றது பாருங்கள்!

---

## 14. பெரிய திருவடி

தாயிற் சிறந்தொரு கோயிலு மில்லை

பெருமாள் கோயிலிலே கருடசேவை மிகவும் சிறந்த தென்பது உங்கட்குத் தெரியும். அஃது ஏன் என்று தெரியா தல்லவா? கருடன் யார்? அவனிடத்திருந்த நற்குணங்கள் யாவை? அவன் ஏன் பெருமாளுக்கு வாகன மாயினுன் என்பதை நீங்கள் அறியவேண்டும்; அறிந்தால் மிக்க மகிழ்ச்சி அடைவீர்கள்.

காசிபர் என்னும் பெயரை உடைய முனிவர் ஒருவர் இருந்தனர்; அவர் தவத்தால் பெரிதும்

உயர்ந்தவர் ; தெய்வத்தன்மை வாய்ந்தவர் ; அவருக்கு மனைவிகள் இருவர். அவருள் ஒருத்தி பெயர் விநதை ; மற்றொருத்தி பெயர் கத்துரு. இவ்விருவரும் இனிது வாழ்ந்து வருங்கால், விநதை வயிற்றிலே அருணன், கருடன் என்னும் புதல்வர் பிறந்தனர். அருணன் முடவன் ; அவன் சூரியனுடைய தேருக்குச் சாரதியானான். கத்துரு ஆதிசேடன், கார்க்கோடகன் முதலிய நாகங்களைப் பெற்றாள்.

இங்ஙனம் இவர்கள் இருக்கையில் ஒருநாள் திருப்பாற் கடலுக்குச் சென்றனர். அங்கே இந்திரன் பரிமாவாகிய உச்சைச் சிரவம் மேய்ந்து கொண் டிருந்தது. விநதையும் கத்துருவும் அதன் அழகை முற்றும் நோக்கி, அகமகிழ்ந்து அதனுடைய வனப்பைப் பற்றி ஒருவருக்கொருவர் பாராட்டிப் பேசிக்கொண் டிருந்தனர். அப்பொழுது விளையாட்டாகக் கத்துரு தனக்குச் சகக்களத்தியாகிய விநதையை நோக்கி "விநதா, இக்குதிரையின் வால் கறுப்பாக இருக்கிறது," என்றாள். அதைக் கேட்ட விநதை குதிரையின் வாலைப் பார்த்தாள். அது வெள்ளை வெளேரென விளக்கமுற்றுத் துலங்கியது. அதனால் அவள் நகைத்து, "கத்துரு, நீ பட்டப்பகலை இருளென்பவர்போல முத்துப்போல ஒளிரும் வாலைக் கறுப்பு என்கிறாய்?" என்றாள். மாற்றாள் அவ்

வாறு கூறியதும் கத்துருவுக்குக் கோபம் உண்டாகிவிட்டது. அதனால் அவள் 'தான் பிடித்த முயலுக்கு மூன்றே கால்' என்பது போல அக்குதிரையின் வால் கறுப்புத்தான் என்று சாதித்தாள். அப்போது விநதையும் கோபம் கொண்டு உண்மையை மறைத்துப் பேசும் கத்துருவை நோக்கி, "உனக்குக் கண்கள் இருக்கின்றனவா? அல்லது அவை குருடாய் ஒழிந்தனவா? வெள்ளையைக் கறுப்பு என்று அஞ்சாமற் கூறும் உன் செருக்கு அடங்கவேண்டும்," என்று சொன்னாள்.

அது கேட்ட கத்துரு சீறியெழுந்து விநதையை உக்கிரமாகப் பார்த்து, "நான் நாளை யாவரும் காணும்படி இக்குதிரையின் வால் கறுப்பென்று எண்பிப்பேன்; அப்படிச் செய்யத் தவறின் உனக்கு அடிமையாவேன்; நீ வெள்ளை என்று எண்பிக்கத் தவறின் எனக்கு அடிமையாக வேண்டும்" என்றாள். அவ் வஞ்சினத்துக்கு விநதையும் உடன்பட்டாள்.

உடனே இருவரும் தமது இருப்பிடங்களுக்குச் சென்றனர். கத்துரு பொய்யை மெய்யாகக் காட்டவேண்டும்; என்ன செய்வது? விளையாட்டு வினையாக முடிந்ததே என்று ஏங்கினாள். பிறகு அவள் ஓர் உபாயத்தை உட்கொண்டு தன் மகன் ஆதிசேஷனை வரவழைத்தாள். கத்துரு அவனைப் பார்த்து, "அப்பா மகனே, நான்

விநதையிடம் உச்சைச் சிரவம் என்னும் குதிரையின் வால் கறுப்பென்று வாதித்தேன்; அவ்வாறே நானேச் சாதிக்காவிட்டால் அடிமையாவேன் என்றும், மதிமயங்கிக் கூறிவிட்டேன். நீ எங்ஙனமாவது உன்னுடைய தாய் சொல்லைக் காப்பாற்றவேண்டும்,'' என்று சொன்னாள். அது கேட்ட ஆதிசேடன் அன்னையை நோக்கி "அம்மா, தாங்கள் ஏன் பொய்யைச் சொன்னீர்கள்? பொய்யை மெய்ப்படுத்துவது அறமாகுமா ? அதற்காக நான் ஒன்றும் செய்யமுடியாது; தாங்கள் உடனே என் மூத்த அன்னையிடம் சென்று, உண்மையைக் கூறிப் பொறுக்கும்படி வேண்டிக் கொள்ளுங்கள்; அவர் தங்கள் குற்றத்தைப் பொறுத்துக் கொள்வார்கள்; நானும் அவரை வேண்டிக்கொள்ளுகிறேன்,'' என்றான். உடனே கத்துருவுக்குக் கடுங்கோபம் மூண்டது. தான் செய்வதற்கு மறுத்துவிட்டது மன்றி மாற்றாளை வணங்கிக் கேட்டுக்கொள் என்று ஆதிசேடன் கூறியது அவள் மனத்தைக் கொதிக்கச் செய்தது. அதனால் அவள் ஆதிசேடன் கூறிய அறிவு மொழியை ஏற்றுக் கொள்ளாமல் அவனுக்குக் கொடிய சாபத்தைக் கொடுத்தாள்.

பின் கத்துரு தன் இளைய மைந்தனாகிய கார்க்கோடகனை அழைத்து அவனிடம் தனக்கும் விநதைக்கும் நடந்தவைகளை எடுத்துச்

சொன்னாள். அவன் தாயின் சொற்படி நடக்க இணங்கினான். அவள் கார்க்கோடகனைக் கட்டித் தழுவி, "குழந்தாய், நீயே தாய் சொல் கடவாத் தனயன்; நீயே உத்தமன்; நீயே கடவுளுடைய அருளைப் பெறுபவன்," என்று மொழிந்து, "கண்மணியே, நீ இன்றிரவு சென்று உச்சைச் சிரவத்தின் வாலிலே நஞ்சைக் கக்கி, அதைக் கறுப்பாக்கிவிடு. நாளை எல்லோரும் காண, எனது சொல்லை நாட்டி விநதையை அடிமை கொள்வேன்," என்றாள். அவ்வாறே கார்க்கோடகன் சென்று அசுவத்தின் வாலை நஞ்சூட்டிக் கருகச் செய்தான்.

மறுநாள் இவ்வேடிக்கையைக் காண யாவரும் திருப்பாற் கடற்கரைக்கு வந்து சேர்ந்தனர். எல்லோரும் ஒருவருக்கொருவர் பலவாறு பேசிக் கொண்டிருந்தனர். கத்துரு, விநதை ஆகிய இருவரும் வந்தார்கள். கத்துரு தனது சூழ்ச்சி தவறாது என்பதனால் களிப்புடன் இருந்தாள்; விநதையோ உண்மைக்கு அழிவில்லை என்னும் எண்ணத்துடன் உவகையோடிருந்தாள். மக்கள் முடிவை அறிய ஆவல் கொண்டிருந்தனர்.

சிறிது நேரம் சென்றதும், கத்துரு அனைவரையும் நோக்கி, "இதோ பாருங்கள்! உச்சைச் சிரவத்தின் வால் கறுப்பாக இருக்கிறது; நேற்று என்னுடன் வெள்ளையென்று வாதித்த விநதை

தன் சொற்படி எனக்கு அடிமையாக வேண்டும்,'' என்றாள். எல்லோரும் குதிரையின் வாலைப் பார்த்தனர் ; அது கறுப்பாகவே காணப்பட்டது. யாவரும் வியப்புற்று, "ஆம்! ஆம்!" என்று கூவினர். விநதையும் பார்த்தாள் ; அவள் கண்ணுக்கும் அப்பரியினது வால் கறுப்பாகவே தோன்றியது. அதனால் அவள், "இது ஏதோ மாயமாக இருக்கிறது,'' என்றாள். அப்பொழுது கத்துரு, "மாயம் என்றால் அதை நிரூபித்துக்காட்ட வேண்டும் ; இல்லாவிட்டால் அடிமையாக வேண்டும்,'' என்றனள். விநதை ஒன்றும் செய்ய முடியாமையால் கத்துருவுக்கு அடிமையானாள்.

விநதை கத்துருவுக்கு அடிமையாகிச் சிறைப்பட்டுக் காலம் கழித்து வந்தாள். பிறகு ஒருநாள் விநதை கத்துருவைப் பார்த்து, "என் சிறையை எவ்வாறு விடுவிப்பாய் ?'' என்று கேட்டாள். அதற்கு அவள், "நீ தேவலோகத்திலே உள்ள அமிர்த கலசத்தைக் கொண்டு வந்து கொடுத்தால் உன் அடிமையை நீக்குவேன்,''என்று கூறினாள். விநதை இதனைத் தன் புதல்வனாகிய கருடனுக்குக் கூறினாள். அவன் தன் தாயின் அடிமையை நீக்குவதற்காகத் துணிந்தான். ஆனால் அமிர்த கலசம் எளிதிலே கொண்டுவரக் கூடிய தன்று ; தேவர்கள் அதைக் காத்திருப்பார். அதனால் தன் மகன் உயிர் நீங்கக் கூடும் என்று

எண்ணிய விநதை தன் மகனை அதற்குச் செல்ல வேண்டாமெனத் தடுத்தாள். ஆனால், கருடன் தன் தாயின் அடிமையை நீக்குவதைக் காட்டிலும் தனது உயிர் பெரிதென்று நினைக்கவில்லை. அதனால் அவன் அன்னையிடம் விடை பெற்றுக் கொண்டு, தேவலோகம் சென்று அமிர்த கலசத்தைக் கண்டான். அங்கே காவல் செய்திருந்தவர்களைத் தனது வல்லமையால் வென்று விட்டு அதை எடுத்துக்கொண்டு வந்தான். வரும் வழியிலே அவனைத் தேவர் பலர் தடுத்து எதிர்த்தனர். அவர்கள் எல்லாரையும் அவன் வென்றான்.

அதன் பின் திருமால் கருடனை எதிர்த்தனர். அவருக்கும் கருடனுக்கும் இருபத்தோரு நாள் கடும் போர் நிகழ்ந்தது. கருடன் தோல்வி அடையவில்லை. அது கண்ட விஷ்ணுமூர்த்தி மகிழ்ச்சிகூர்ந்து, "கருடா, உன் அறிவையும் ஆற்றலையும் மெச்சினேன்; உனக்கு வேண்டிய வரத்தைக் கேள்," என்றனர். அப்போது கருடன், "உம்மிடம் நான் பெறவேண்டிய வரம் ஒன்றுமில்லை; உமக்கு வரம் வேண்டுமானால் நான் தருவேன்," என்றான். உடனே அச்சுதன், "அன்பனே, நீ எனக்கு ஊர்தியாக இருக்க வேண்டினேன்," என்றார். அவ்வாறே அவருக்குக் கருடன் வரம் தந்து அவரிடம் விடை பெற்றுக்கொண்டு அமிர்த கலசத்துடன் சென்றான்.

சென்ற கருடன் மூத்த அன்னேயிடம் அமிர்த கலசத்தைக் கொடுத்தான். அவள் அதைப் பெற்றுக்கொண்டு விநதையின் அடிமையை விடுவித்தாள். விநதை தன் அருமருந் தன்ன செல்வனே வாழ்த்தி அவன் என்றும் அழியாமல் இருக்கவேண்டுமென வரம் தந்தாள். கருடனும் திருமாலுக்கு வாகனமாகி என்றும் அழியாச் செல்வத்துடன் விளங்குகின்ருன். கருடனே வைணவர் பெரிய திருவடி எனவும் கருடாழ்வார் எனவும் போற்றுவார்கள். இந்துக்கள் அனேவரும் இன்றும் கருடதரிசனம் செய்து வருகின்றனர்.

---

## 15. நோன்பென்பது கொன்று தின்னுமை

உலகத்திலே காணப்படுகின்ற எல்லாப் பொருள்களும் முழுமுதற் கடவுள் ஒருவராலேயே படைக்கப் பட்டவைகள். அவைகள் எல்லாம் இறைவனுக்கு அருமைக் குழந்தைகளே. நாம் ஓர் உயிரையும் கொல்லுதற்கு நமக்கு உரிமையில்லே. அப்படிச் செய்தால் அது மிக்க பாவமாகும். மரம், செடி, கொடி முதலிய தாவரங்களும் உயிருள்ளவைகளே. அவைகட்கு உயிரில்லாவிட்டால் அவை வளரமாட்டா. அவைகளும் நம்மைப் போலவே இன்பமும் துன்பமும் அடைகின்றன என்றும் நமது இந்திய

நாட்டு விஞ்ஞான திலகராகிய ஜகதீச சந்திரர் விளக்கிக் காட்டியுள்ளார். இவைகளே இங்ஙனம் இருக்கின்றன என்றால் ஆடு, கோழி முதலியவை களைப்பற்றிச் சொல்லவேண்டுவதில்லையே.

ஜீவப்பிராணிகள் நாம் அவைகளிடத்தில் அன்பைக் காட்டினால் அவை அதனை உணர்ந்து இன்பம் அடைகின்றன; அவற்றைத் துன் புறுத்தினால் துன்பம் அடைகின்றன. அதனால் நாம் எவ்வுயிரையும் பாதுகாத்தல் வேண்டும். அவைகளும் நம்மைப் போலவே தமது உயிரிடத் தில் ஆசை வைத்துக்கொண்டு இருக்கின்றன. அநாவசியமாய் ஓர் உயிரைப் போக்கினவன் கட வுள் அருளுக்கு உரிமையுடையவன் ஆக மாட் டான். இயன்ற வரையில் நடக்கும் பொழுதுங் கூட உயிர்களுக்குத் தீமை வராதபடி பார்த்து நடக்கவேண்டும். தேள், பாம்பு முதலான துஷ்ட ஜந்துக்களையும் இயன்ற வரையில் கொல்லாமல் இருத்தல் வேண்டும்.

தொன்றுதொட்டு வந்த பழக்கத்தினால் பலர் ஊன் உண்ணுகின்றனர். அது பல உயிர்களின் கொலையாக இருப்பதால் அப்பழக்கத்தை ஒழிக்க ஒவ்வொருவரும் முயல வேண்டும். எத்தகைய கொடும் பழக்கத்தையும் நாளடைவிலே நீக்கி விடலாம். கிளியினிடம் தோன்றும் அன்பு

கோழியினிடம் தோன்றுமைக்கு என்ன காரணம்? கோழியைக் கொன்று தின்று கண்ட சுவையே அன்றி வேறில்லை. சிலர் புருவைத் தாமே வளர்த்துத் தாமே கொன்று அருந்துகின்றனர். அத்தகைய செயல் ஒருவருக்கு இயற்கையாக உள்ள அருட் குணத்தை அழித்து விடும்.

நாம் அன்பைக் கொண்டு அன்பைப் பெற வேண்டும். உயிர்க ளிடத்து அருளைக் காட்டினேமாயின் கடவுள் திருவருளை நாம் அடைவது திண்ணம். சிலர் கொல்லாமை ஒன்றை மட்டும் கைக்கொண்டு மாடு, ஆடு முதலிய பிராணிகளை அன்பாகப் பாதுகாப்பதில்லை. அது பெரிய பாவமே யாகும். சிலர் கன்றுக்குச் சிறிதும் பால் விடாமலே பசுவைக் கறக்கின்றனர்; அதனை நுட்பமாக அறிந்து கொள்ளும் சில பசுக்கள் கன்றுக்கெனக் கொஞ்சம் பாலை அடக்கி வைத்துக் கொள்ளுகின்றன. இவ்வற்புத ஆற்றல் பசுவிற்குக் கொடுத்த பெருமான் அருளை நினைத்தேனும் நாம் இங்ஙனம் செய்தல் கூடாது. சிலர் மாடுகளை வருத்தி வேலை வாங்குகின்றனர்; அவைகட்கு வேண்டும் புல்லும் நீரும் கூடத் தருவதில்லை; அவற்றைக் குளிப்பாட்டிக் கழுவித் தூய்மையாக வைப்ப தில்லை. இவை யெல்லாம் செய்யத் தக்க கருமங்கள் அல்ல.

நமது நாட்டார் பாம்புக்கும் பால் வார்ப்பவர்கள். எறும்புக்கும் நொய் நுறுங்கு தருபவர்கள்; காக்கைக்கும் சோறு வைப்பவர்கள்; கிளி, பூவை, புறு முதலிய பறவைகளைச் செல்வப் பிள்ளைகளுக்கு நிகராக வளர்ப்பவர்கள். இத்தகையோர் கொலை செய்தலை அறவே விடவேண்டும்; அவற்றை அன்பாக வளர்த்தலை இன்றியமையாத கடமையெனக் கொள்ள வேண்டும்.

நமது பாவத்தைத் தெய்வத்தின்மீது போட்டுவிடுவது போலப் பலர் தெய்வங்கட்கும் பிராணிகளைப் பலி இடுகின்றனர். அது கழுவாய் இல்லாத வழுவாகும். கடவுள் உயிர்க்கொலையை ஒருபொழுதும் விரும்பார். அவர் அனைத்துயிர்க்கும் அருமைத் தந்தை; அன்பு மிக்க அன்னை. ஆதலால் ஆராய்ந்து பார்த்தோமாயின் நாம் நமது குற்றத்தை இனிது உணர்வோம். அதனால் அத்தகைய வழக்கத்தையும் அறவே விட்டுவிட வேண்டும்.

மரக்கறி வகைகளிலும் கொலை உண்டு என்றாலும் மரம், செடி, கொடி முதலான பொருள்கள் படும் துன்பம் நமது கண்களுக்குப் புலப்படாமையால் நமது உள்ளம் வருந்த வில்லை; அதனால் தம்மிடம் உள்ள அருட்குணம் அழியாது; இருப்பினும் அப்பாவத்தை ஒழிக்கவே நாம் நாடோறும் விருந்திடல் முதலான அறங்

களைச் செய்யவேண்டுமென் அறநூல்கள் முறையிடுகின்றன. ஆகையால், நாம் எல்லோரும் எல்லா உயிர்களிடத்தும் அன்பைப் பெருக்கிப் பிற உயிர்கட்கு இன்பம் செய்யும் மேலான எண்ணமுடையவர்களாய்த் திருவருட் செல்வத்தை அடைய அல்லும் பகலும் ஊக்கத்துடன் உழைப்போமாக.

### சிவபெருமான்

வடிவேறு திரிசூலம் தோன்றும் தோன்றும்
வளர்சடைமேல் இளமதியம் தோன்றும் தோன்றும்
கடியேறு கமழ்கொன்றைக் கண்ணி தோன்றும்
காதில்வெண் குழைதோடு கலந்து தோன்றும்
இடியேறு களிற்றுரிவைப் போர்வை தோன்றும்
எழில்திகழும் திருமுடியும் இலங்கித் தோன்றும்
பொடியேறு திருமேனி பொலிந்து தோன்றும்
பொழில்திகழும் பூவணத்தெம் புனிதனார்க்கே. (க)

அணியனவும் சேயனவும் அல்லா அடி
அடியவர்கட் காரமுதம் ஆய அடி
பணிபவர்க்குப் பாங்காக வல்ல அடி
பற்றற்றார் பற்றும் பவள அடி
மணிஅடி பொன்அடி மாண்பாம்அடி
மருந்தாய்ப் பிணிதீர்க்க வல்ல அடி
தணிபாடு தண்கெடில நாடன் அடி
தகைசார் வீரட்டத் தலைவன் அடி. (உ)

பண்ணின் இசையாகி நின்றாய் போற்றி
பாவிப்பார் பாவம் அறுப்பாய் போற்றி
எண்ணும் எழுத்தும் சொல்லானாய் போற்றி
என்சிந்தை நீங்கா இறைவா போற்றி
விண்ணும் நிலனும் தீயானாய் போற்றி
மேலவர்க்கும் மேலாகி நின்றாய் போற்றி
கண்ணின் மணியாகி நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி.

தேவாரம், திருநாவுக்கரசு சுவாமிகள்.

தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்
திருநீல கண்டத்துக் குயவனார்க் கடியேன்
இல்லையே என்னாத இயற்பகைக்கும் அடியேன்
இளையான்றன் குடிமாறன் அடியார்க்கும் அடியேன்
வெல்லுமா மிகவல்ல மெய்ப்பொருளுக் கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டர்க் கடியேன்
அல்லிமென் முல்லை அந்தார் அமர்நீதிக் கடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே.

தேவாரம், சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியை
கரையிலாக் கருணைமா கடலை
மற்றவர் அறியா மாணிக்க மலையை
மதிப்பவர் மனமணி விளக்கைச்
செற்றவர் புரங்கள் செற்றஎஞ் சிவனைத்
திருவீழி மிழலைவீற் றிருந்த
கொற்றவன் தன்னைக் கண்டுகண் டுள்ளம்
குளிர என்கண் குளிர்ந்தனவே.

திருவிசைப்பா, சேந்தனார்.

மன்னுகதில்லை வளர்கநம் பத்தர்கள்
வஞ்சகர் போய் அகலப்
பொன்னின்செய் மண்டபத் துள்ளே
புகுந்து புவனியெல்லாம் விளங்க
அன்னநடை மடவாள் உமைகோன்
அடியோருக் கருள்புரிந்து
பின்னைப்பிறவி அறுக்க நெறிதந்த
பித்தற்குப் பல்லாண்டு கூறுதுமே.

திருப்பல்லாண்டு, சேந்தனுர்.

முன்னை வினையிரண்டும் வேரறுத்து முன்நின்ருன்
பின்னைப் பிறப்பறுக்கும் பேராளன்—தென்னன்
பெருந்துறையின் மேய பெருங்கருணை யாளன்
வருந்துயரந் தீர்க்கும் மருந்து.
இன்பம் பெருக்கி இருள் அகற்றி எஞ்ஞான்றும்
துன்பம் தொடர்வறுத்த சோதியாய்— அன்பமைத்துச்
சீரார் பெருந்துறையான் என்னுடைய சிந்தையே
ஊராகக் கொண்டான் உவந்து.

திருவாசகம், மாணிக்கவாசக சுவாமிகள்.

---

## 16. திருநந்திதேவர்

சிலாத முனிவர் தம் அருமை மனைவியாராகிய சித்திரவதியாரோடு வாழ்ந்து வந்தனர். அவருக்குப் பிள்ளைப் பேறு உண்டாக வில்லை. அதனுல் சித்திரவதியார் அடிக்கடி தமக்கு மகவில்லாக் குறையை முன்னிட்டு வருந்தினுர். அப்படி

அவர் இருப்பதைக் கண்ட முனிவர் தம் காதலி யாரின் துன்பத்தைத் தீர்க்க வெண்ணிச் சிவ பெருமானை நோக்கி அருந்தவம் புரிந்தனர்.

அவர் தவத்துக்கு இரங்கி அடியார்க்கெளிய ராகிய சிவபெருமான், முனிவர் முன் தோன்றி னர். அப்பொழுது முனிவர், அவர் திருவடித் தாமரைகளில் அடியற்ற பனையென விழுந்து வணங்கி, "ஐயனே, அருட்கடலே, எனக்கு ஓர் இறவாப் புதல்வன் பிறக்க அருள்செய்ய வேண் டும்," என்று கேட்டார். அதற்குக் கடவுள், "முனியே, நீ வேள்வி செய்ய நிலத்தை உழு வாய்; அப்பொழுது உனக்கு நம்மைப் போன்ற ஒரு புதல்வன் பிறப்பான்," என்று அருள் செய்து மறைந்தனர்.

சிறிது காலஞ் சென்றபின் சிலாத முனிவர் யாகம் செய்யப் பூமியை உழுதார். அங்கே மாணிக்கப் பெட்டி ஒன்று படைச்சாலிலே தென் பட்டது. உடனே முனிவர் ஆர்வத்துடன் அதை எடுத்துத் திறந்தார். அதன்கண் நான்கு திருக் கரங்களும் சடைமுடியுமாக ஓர் அழகிய மஹா புருஷன் காணப்பட்டான்; உடனே முனிவர் பெட்டியை மூடி மீண்டும் திறந்து பார்த்தார்; அங்கே அழகொழுகும் சிறு மகவு தோன்றியது; அப்போது அச்செல்வனை ஆரா அன்புடன் சிலாத முனிவர் வாரி எடுத்துக்கொண்டு, உச்சி

மோந்து, முத்தமிட்டுக்கொண்டு ஓடிச் சென்று தம் காதற் கிழத்தியாராகிய சித்திரவதியாரிடம் கொடுத்தனர். அவ்வம்மை அவ்விளங் குழவியைக் கண்டதும் வாங்கி அணைத்துக்கொண்டு, பால் சுரந்து, ஆனந்தக் கண்ணீர் விட்டார்.

மைந்தர் பிறையைப் போல வளர்ந்து, அனைவருக்கும் இன்பத்தை ஊட்டினமையால் நந்தி என்று அழைக்கப்பட்டு வந்தனர். பின்பு நந்தி பல நூல்களையும் கற்கத் தொடங்கி, அவற்றை மிக விரைவிலே அறிவு நுட்பத்துடன் கற்று முடிக்கலானார். நந்திக்கு ஆண்டு ஏழு நிரம்பியது. அப்போது மித்திராவருணர் என்பவர் வந்தார். அவர் நந்தியைக் கண்டு மகிழ்ந்தார்; ஆனால் அவருக்கு வயது பதினாறுதான் என்பதை உணர்ந்து வருந்தினார். அவர் முகவாட்டத்தை அறிந்த சிலாத முனிவர் அவருடைய எண்ணத்தை வினவி அறிந்து தாமும் துன்புறலானார். அது சித்திரவதியாருக்கும் தெரிந்தது. அவ்வம்மையாரோ அதுவே கவலையாய் நாளுக்கு நாள் உருகி வந்தனர்.

இவைகளையெல்லாம் நந்தி தெரிந்துகொண்டு, தம் பெற்றோர்களைத் தேற்றிச் சிவபெருமானை நோக்கித் தவம் செய்தார். சிவபெருமான் அவருக்கு எதிர்ப்பட்டு, "உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டார். அதற்கு நந்தி, " சுவாமி,

அடியேனுக்குத் தேவரீரிடத்தில் என்றும் நீங்காத அன்பு இருக்கவேண்டும்," என்று கேட்டார். சிவபெருமான் அவ்வாறே அருள் செய்து திருவுருக் கரந்தார்.

மீண்டும் ஒருமுறை நந்தி கடுந்தவம் செய்தார். அப்பொழுதும் கண்ணுதற்கடவுள் அருள் சுரந்து வெளிப்பட்டு, "யாது வரம் வேண்டும்?" எனக் கேட்டார். நந்தி, "சுவாமி, தேவரீரையும் அடியாரையும் பழிப்பவர்களைத் தண்டிக்கும் அதிகாரம் எனக்கு வேண்டும்," என்று கேட்டார். அவ்வாறே பெருமான் அவருக்கு அருள் செய்தான்.

மறுபடியும் நந்தி அன்பும் ஊக்கமும் கொண்டு பெருந் தவம் புரிந்தார். எல்லாம் வல்ல இறைவன் அவர்முன் தோன்றி, வேண்டும் வரம் யாதென வினவினன். நந்தி, "ஆண்டவனே, தேவரீரைப் போலத் திருவுருப் பெற்று என்றும் அழியாமல் சிவலோகத்துக்குத் தலைவனாக இருக்க வேண்டும்," என்று கேட்டார். அதற்குச் சிவபெருமான் இரங்கி, அவர் திருமுடியிலே தமது திருக்கரத்தை வைத்தார். நந்தி சிவனாரைப் போன்றே செந்நிறம், முக்கண், சடைமுடி, சதுர்ப்புஜம் முதலியவைகளை அடைந்தார்; திருநந்தி தேவர் எனப் பட்டாபிஷேகம் செய்யப்பட்டார். இவர் கையிலே பிரம்பை வைத்துக்கொண்டு

கைலையைக் காத்துவருபவர். இவரே ஞானசாரியர்; இவர் சிவபெருமானை ஒருகாலத்திலே தாங்கினமையால், சிவன் கோயிலில் நந்திவாகன உற்சவம் நடக்கிறது. இவர் தவத்தின் பெருமையால் அழியாப் பதத்தை அடைந்தார். இவரைப் போலவே நாமும் தவம் செய்து வாழ்வோமாக. தவம் என்பது நமக்கு வரும் துன்பத்தைப் பொறுத்துக்கொள்ளுதலும், எவ்வுயிர்க்கும் துன்பம் செய்யாமையும் ஆகிய இவைகளே யாம்.

---

## 17. உணவு கொள்ளும் முறை

உணவு கொள்ளுதல் ஓர் ஒழுங்காக இருத்தல் வேண்டும். அப்பொழுதுதான் நெஞ்சம் அமைதியாக நிற்கும். எப்பொழுதும் மனத்துக்குப் பொருத்தமான இடத்திலே அமர்ந்து நிதானமாய் உண்ணல் வேண்டும். உண்ணும் பொழுது ஆத்திரம் கூடவே கூடாது. நாம் பந்தியிலே அமர்ந்து உண்ணும் காலங்களிலும் ஒழுங்கின்றி இருத்தல் யாவருக்கும் அருவருப்பை விளைவிக்கும். அதனால் நம் முன்னோர், உணவு கொள்ளும்போது இவ்வாறிருக்க வேண்டுமெனச் சில முறைகளை விதித்துள்ளார். அவற்றை நாம் அறிந்துகொண்டு அங்ஙனமே ஒழுகுவோமாக.

உணவு கொள்ளும் இடம் வெளிச்சம் உள்ள தாய்க் காற்று உலாவுவதாய்க் கோமயத்தால் மெழு கப்பட்டதாய் இருத்தல் வேண்டும். உணவுக்குரிய பாத்திரங்கள் பொன், வெள்ளி, வெண்கலம் இவைகளால் செய்யப்பட்டதாக இருக்கலாம். இவை எல்லாவற்றிலும் மட்பாண்டமே சிறந் தது. இலைகளில் வாழை இலை மிகவும் நல்லது. புன்னை, பலா முதலிய இலைகளிலும் உண்ணலாம். பாலுள்ள மரங்களின் இலைகள் பக்க வாதம், க்ஷயம் முதலான நோய்கள் வாராமற் காக்கும்.

வாழை இலையினுடைய அறுத்த பாகத்தை எப்பொழுதும் வலப்பக்கமாக வைத்துக்கொள்ள வேண்டும். எந்தக் கறியையும் கடித்துவிட்டு இலை யில் வைக்கக் கூடாது. உமிழ வேண்டிய பகுதி களை இலையின்கீழே மறைத்து வைக்க வேண்டும். சோற்றைக் கை முழுதும் ஆக்கிக்கொள்ளாமல் உணவைக் கைக்கொள்ள வேண்டும். சோற்றை வலப்பக்கமாகத் தள்ளிக்கொண்டு உண்ணல் வேண்டும். வலக்கைப் பக்கத்திலே முதல் முதல் பருப்புப் படைக்கப்படல் வேண்டும். அப்பளத் தை எச்சிலாகு முன்பே பிட்டு வைத்துக்கொள்ளல் வேண்டும்; இல்லாவிட்டால் அது பக்கத்து இலை யில் தெறிக்கும். பாயசம், மோர் அன்னத்துக்கு முன் கொள்ள வேண்டும். உண்ணும்போது கட வுளை நினைத்துப் பின் உண்ண வேண்டும்.

தண்ணீரை இடையிடையே பருகலாகாது; யாவும் உண்டு முடிந்த பின்பு கை கழுவிச் சுத்தம் செய்தபின் பருகல் வேண்டும். தண்ணீர் அருந்தும்பொழுது பாத்திரத்திலுள்ள நீரைச் சிறிது சாய்த்து, இரு கையாலும் அருந்த வேண்டும். உண்ணும்பொழுது சிரித்தலும், வீண்வார்த்தை பேசுதலும், கோபங் கொள்ளுதலும், கவலைப்படுதலும், ஆழ்ந்து யோசித்தலும் ஆகா. உண்டு முடிந்தபின் இலையிலே மிகுதி யிருந்தால் அவற்றை யெல்லாம் ஒன்ருகச் சேர்த்து, முன் இலையின் கீழே உமிழ்ந்துள்ளவற்றை எடுத்து அதனேடு சேர்த்து மூடிவிட்டுச் செல்லவேண்டும். பந்தியில் எல்லாருக்கும் முன் எழுந்து போகக் கூடாது. காலை நீட்டிக்கொண்டும், கால்மேல் கால் வைத்துக் கொண்டும், இடக்கையை ஊன்றிக் கொண்டும் உண்ணலாகாது.

பலர் இருக்கையில் அவர்கட்குக் கொடாமல் ஒருவன் தானே உண்ணுதல் தீது. உப்பு, கறி வகை, நெய், எண்ணெய், சோறு முதலிய எவற்றையும் கையாற் பரிமாறலாகாது. இரண்டு கால்களையும் முடக்கி இட முழந்தாளின்மேல் இட முழக்கையை ஊன்றிக்கொண்டு உண்ண வேண்டும்.

யாவருக்கும் இரண்டு வேளை உணவே நல்லது. மூன்று வேளைக்குமேல் உண்ணல் ஆகவே

ஆகாது. இரவு ஏழுமணிக்குள் உண்ண வேண்டும். எட்டுமணிக்குமேல் உண்பதால் பல நோய்கள் உண்டாகும் ; விரைவில் செரியாது. யாருக்கும் முக்கால் வயிறு உணவே உத்தமம். அன்னம் அதிக சூடுள்ளதாக இருக்கலாகாது ; சூடில்லாத அன்னமும் கூடாது. சிறிது சூடுள்ள அன்னமே உத்தமோத்தமம். நட்டரிசியும் குழைந்த அன்னமும் ஆகா. பதமாகச் சமைத்த அரிசியே உடம்புக்கு நன்மை தரும்.

பருப்பும் நெய்யும் சேர்ந்த அன்னம் மிகவும் நல்லது. பச்சடிகளில் புளிப்புள்ளது பித்தத்தைப் போக்கும்; உறைப்புள்ளது சிலேத்துமத்தைக் கண்டிக்கும்; இனிப்புள்ளது அரோசகத்தை ஒழிக்கும். பொரியல் தீது. வெறும் புளித்துவையல் இரத்தத்தை முறிக்கும். புளி சேர்த்த துவையலும் காரத் துவையலும் நலந் தரும். புளித்த தயிர் சீரணத்தைச் செய்யும். ஊறுகாய்கள் பசியை உண்டாக்கி அரோசகத்தை நீக்கும். பருப்பிறுத்த மிளகு ரசம் பலவகைப் பிணிகளேயும் தீர்க்கும். பழவகைகள் உடம்புக்கு மிகவும் நன்மையை உண்டாக்கும். அடிக்கடி சிற்றுண்டிச் சாலேக்குச் சென்று, விருப்பமில்லாத வேளைகளிலும் கண்ட பொருளேப் புசிப்பவருடைய நோய்க்கு அளவில்லே. உண்ட உணவு செரித்தது அறிந்து உண்பவனுக்குப் பேரின்பம் உண்டாகும். அஃ

தில்லாதானுக்குப் பிணிகளால் துன்பமே மிகும். அளவறிந்து, காலத்தின் நிலை அறிந்து, கறிகளின் குணமறிந்து, பசித்துண்க.

———

## 18. ‘கொக்கென்று நினைந்தனையோ கொங்கணவா ?’

செந்தமிழ் மொழியிலே திருக்குறள் எனப் பெயரிய ஓர் அரிய பெரிய நூல் உளது; அஃது எல்லாச் சாதியார்க்கும் எல்லாச் சமயத்தார்க்கும் ஒத்த தமிழ்மறை என்று புகழப் படுவது. அதிலே இல்லாத பொருள் இல்லை. அதனை ஒருவன் கற்றுவிட்டால் அவன் எல்லாவற்றையும் அறிந்து விடுவான். அது தேவாமிர்தம் போலத் தன்னைக் கற்றவருக்கு மிகப் பேர் இன்பத்தையும் குற்றங் குறைகளையும் நீக்க வல்லது. அத்தகைய மேலான நூலை அருளிச் செய்தவர் திருவள்ளுவர் என்னும் தெய்வப் புலவர்; அவர் அறிவுக் கிருப்பிடம்; பொறுமைக்குப் பூஷணம்; கல்வியின் கண்மணி; ஒழுக்கத்திற்கு இன்னுயிர். இவர் இல்லறத் துணைவியாக வாசுகி அம்மை என்னும் நங்கையை மணந்து கொண்டனர். அவ்வம்மை இவருடன் இல்லறம் நிகழ்த்திய வரலாறு உள்ளத்தை உருக்கும் தன்மையது. அவருடைய கற்புடைமை மகளிர் எல்லாருக்கும் எடுத்துக் காட்டாக உள்ளது. அதனைச் சுருங்க

ஈண்டு உரைக்கின்றேன் ; அன்புற்றுக் கேட்பீராக.

ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர்க் காவிரிப்பாக்கம் என்னும் ஊரில் மார்க்க சகாயர் என்னும் ஒரு வேளாண்செல்வர் இருந்தனர் ; அவர் ஆயிரம் ஏர் வைத்துப் பயிர் செய்பவர் ; அவருக்கு வாசுகி என்னும் அருமை மகள் பிறந்துவளர்ந்து, மணப்பருவம் அடைந்திருந்தனர். அக்காராளர் தம் செல்வப் பாவைக்குத் தக்க வரனைத் தேடி நின்றனர். அப்போது திருவள்ளுவர் உபதேச அமிழ்தத்தைச் செவியார உண்டுவரும் மாணவர்கள், ஆசிரியர் திருவடிகளைத் தொழுது, "குருமணியே, தேவரீர் ஒரு மங்கையை மணந்து இல்லற வொழுக்கத்தின் இயல்பினை எங்கட்கு இனிது விளக்க வேண்டும்," என வேண்டிக்கொண்டனர். அதற்கு நாயனார், "இம் மணலைச் சமைத்துத் தரும் பெண் யாவளாயினும் அவளை நான் மணந்து கொள்வேன்," என்றனர். இதனைக் கேட்ட மாணுக்கர்கட்கு அஃதியலாத காரியம் எனத் தோன்றவே, அவர்கள் புன்னகை புரிந்து, "ஆரியரே, இதைவிட மணம் வேண்டாம் என்றே கூறி விடலாமே," எனக் கூறினர். அதற்கு வள்ளுவனார், "ஒன்றும் தடை நிகழ்த்தாது முயன்று பாருங்கள்" என்றார். மாணவர் அஞ்சிச்

சென்றனர்; சென்றவர் காவிரிப் பாக்கத்திலே இருந்த மார்க்கசகாயரைக் கண்டு அவர் தம் மகளைத் தேவருக்குத் தரும்படி வேண்டினர். அவரோ, தெய்வப்புலவர் கல்வித் திறன், அறிவொழுக்கங்கள், குணநலம் முதலானவற்றையெல்லாம் கேட்டுக் கேட்டுக் காது செவிடு பட்டவர்.

ஆதலின் அவர் அதற்கு உடனே இசைந்தார். ஆனல், மணலைச் சோருக்க வேண்டும் என்னும் செய்தியைப் பெண் கேட்கப் போனவர் எங்ஙனம் கூறுவது? அவர்கட்கு வாயைத் திறக்கவே முடியவில்லை. மார்க்கசகாயர், அவர்கள் விழிப்பதைக் கண்டு ஏதோ சொல்லுதற்கு நாணுகின்றனர் என அறிந்து, கூச்சமும் அச்சமும் இன்றிக் கூற வேண்டுவதைக் கூறலாமெனக் கூறினர். அப்பால் அப்பெரியோர் மணற் சமையலைப் பற்றி விளம்பினர். முதலியார் வெட்டென நகைத்து, “இது ஆகாத காரியம்,” என்று சொல்லினர். அப்போது அவர்கள் “தாங்கள் தமது அருமைப் புதல்வியாரிடம் இதனைச் சொல்லி, அவர் தரும் விடையினை எங்கட்குக் கூறுதல் வேண்டும்,” என்று அவரை வற்புறுத்தினர். அது தக்கதே என முதலியார் இணங்கித் தம் மகளிடம் அச் செய்தியை மொழிந்தனர். அவ்வம்மையார் அவ்வாறே தாம் முடிப்பதாக இரு

கரங்களாலும் மணலை வாங்கிக்கொண்டனர். முதலியார் வியந்து, மற்றவரிடம் இதனை வெளியிட அவர்களும் அக மிக மகிழ்ந்தனர். பின்னர்ச் சிறிது நேரத்திற் கெல்லாம் அம்மையார் மணலை அமுதாக்கிக் கொணர்ந்தனர். அனைவரும் தெய்வப் புலவருக் கேற்ற தெய்வப் பாவை என்றனர். மனத்தின் ஆற்றலை யாவரே அளக்கவல்லார்? நம்பிக்கை உடையாருக்கு ஆகாத கருமம் உண்டோ?

சின்னாட்களிலெல்லாம் வாசுகியார் வள்ளுவனாருக்கு வாழ்க்கைத் துணைவியானார். அவர் இல்வாழ்க்கை எங்கும் காணப்படாத புது வாழ்க்கையாக இலங்கியது. நாயனார் தமது உடம்பால் உழைத்து உண்ணுதலே அறமென நெய்தற் றொழிலைக் கைக்கொண்டு வாழ்ந்து வருவாராயினர். அவர் சுருங்கிய செலவிலே எளிய வாழ்க்கையை நடத்தி வந்தார். அந்நாளிலே கோங்கணர் என்னும் சித்தர் ஒருவர் இருந்தார்; அவர் தவத்தாற் சில சித்திகள் கைவரப் பெற்றவர். அவர் ஒருநாள் தியானத்தில் உறைத்து நிற்கையில் ஒரு கொக்கு அவர் மீது எச்சமிட்டது. உடனே சித்தர் அப்புள்ளை உருத்து நோக்க அஃது உடனே சாம்பராயிற்று. அதைக் கண்ட கொங்கணருக்குச் செருக்கு மிகுந்தது.

பின்பு கொங்கணர் திருவள்ளுவர் அகத்துக்கு ஐயத்திற்காகப் போந்தனர். அப்பொழுது

வாசுகி அம்மையார் தம் கணவனுருக்குப் பணி விடை புரிந்திருந்தனர்; அதனுற் சிறிது காலந் தாழ்த்து அமுது கொணர்ந்து வந்தனர். கொங் கணர் சட்டென அவரை உருத்து நோக்கினுர். அவ்வம்மையார், "கொக்கென்று நினைந்தனை யோ கொங்கணவா ?" என்று கூறி உட்சென் றனர் ; சித்தர் சித்தங் கலங்கினுர். அவர், "என்ன இது ! என் எண்ணமும் நான் கொக்கை எரித்த தும் இவ்வம்மைக்கு எப்படித் தெரிந்தன ? அன் றியும் என் பார்வை அவரை அழிக்கவும் இல்லை யே!" என்று எண்ணி மனையுட் புகுந்து வள்ளு வரை வணங்கினுர். அவர் அவரைத் தழுவி இருத்தித் தாம் வந்த காரியத்தை வினவினுர். அதற்குக் கொங்கணர் "ஐயனே, இல்லறம், துற வறம் என்னும் இரண்டனுள் எது சிறந்ததெனத் தெளிய விரும்பினேன்," என்றனர். அதற்கு நாய னுர் புன்னகை புரிந்து வாளா விருந்தனர்.

பிறகு சற்று நேரத்திற் கெல்லாம் வள்ளு வர் மனைவியாரைத் தமக்கும் கொங்கணருக்கும் பழஞ்சோறுபடைக்கச் சொன்னுர். அவர் அமுது படைத்த வளவிலே இருவரும் உண்ணத் தொடங் கும் பொழுது, நாயனுர், "பெண்ணே, அமுது மிகச் சுடுகின்றது; விசிறி கொண்டுவா," என்ற னர். அவ்வம்மையார் உடனே விசிறி கொண்டு வந்து விசிறினுர். கொங்கணர் வியப்பால் விழுங்

7

கப்பட்டனர். அப்பால் வள்ளுவருடைய கையி லிருந்த குழல் என்னும் கருவி கீழே விழுந்தது. அப்பட்டப்பகலிலே அவர், "பெண்ணே, விளக் கெடுத்துவா," என்ருர். அவ்வேளை வாசுகி அம் மையார் கிணற்றிலே நீர் முகந்துகொண் டிருந் தார் ; அவர் செவியிலே கணவர் சொல் நுழைந்த வுடனே நீர்க்குடத்தை அப்படியே விட்டுவிட்டு, விளக்கை எடுத்துக்கொண்டு ஓடிவந்தார்; பின்னர் அவ்வம்மை போய்ப் பார்க்கக் கிணற்றிலே குட மும் கயிறும் அந்தரத்திலே நின்றன. இதுவும் கொங்கணருக்குத் தெரிந்தது. பின்பு அவர் 'இத் தகைய மனையாள் வாய்த்தால் இல்லறம் நன்றே ; இல்லையாஞல் துறவறம் நன்று' என்று நினைந்து வள்ளுவரிடம் தமது குற்றத்தைக் கூறிப் பொறுத் தருள வேண்டிக்கொண்டு, அவரையும் அவர் கற்பிற் சிறந்த மனைவியாரையும் வணங்கி விடை பெற்றுச் சென்ருர்.

நாயஞர் உண்ணும் பொழுதெல்லாம் ஒரு கலத்திலே நீரும், ஓர் ஊசியும் பக்கத்தில் வைத் துக்கொள்ளுவது வழக்கம். ஆஞல் அவை ஒரு நாளும் பயன்படவில்லை. இவை இன்ன காரணத் திற்காக வைக்கப்பட்டன என்பது வாசுகியாருக் குத் தெரியாது ; ஆயினும் அவர் கணவஞரை அதைப்பற்றி ஒருநாளும் கேட்டது மில்லை. பின் வாசுகியார் இறக்குந் தறுவாயில் அவரைப் பற்றி

அவ் வெண்ணம் சுழன்றது. அதனால் உயிர் போகவில்லை; அது தெரிந்த நாயனார் தம் ஆருயிர்ச்செல்வியை நோக்கி, "உன் எண்ணம் யாது?" என்று கேட்டார். அப்பொழுது அவர், 'யாதொன்றும் இல்லை; தாங்கள் கலத்தின் நீரையும் ஊசியையும் அருகிலே வைத்துக்கொண்ட காரணம் அறியேன்; அதனை அறிய விரும்புகின்றேன்," என்றனர். அது கேட்ட தேவர் கண்ணீர் துளித்து, "பெண்ணருங்கலமே, அமுது சிந்தினால் அதை ஊசியால் எடுத்து நீரிலே கழுவி எடுத்துக்கொள்வதற்கே வைத்துக்கொண்டேன்; நீயும் அமுதைச் சிந்தியதில்லை; நானும் சிந்தவில்லை; ஆகவே அவை பயன்படவில்லை," என்று மொழிந்தார். அதைக் கேட்டவுடன் அம்மையார் தமது அழகிய விழிகளை மூடிவிட்டார். வள்ளுவர், 'இனி என் கண் துயிலாது,' எனக் கூறி வருந்தினர். இவ்வம்மையாரின் தூய்மையான உள்ளமும் அருமைக் குணங்களும் கற்புடைமையும் எண்ணுந்தோறும் நமது நெஞ்சை உயர் நிலையிலே செலுத்தி மகிழ்ச்சியைத் தருகின்றன.

முருகவேள்

பாட்டு

நீலங்கொள் மேகத்தின் மயில்மீதே
நீவந்த வாழ்வைக்கண் டதனாலே
மால்கொண்ட பேதைக்குன் மணநாறும்
மார்தங்கு தாரைத்தந் தருள்வாயே

வேல்கொண்டு வேலைப்பண் டெறிவோனே
வீரங்கொள் சூரர்க்குங் குலகாலா
நாலந்த வேதத்தின் பொருளோனே
நானென்று மார்தட்டும் பெருமாளே. (க)

வேதவெற்பி லேபுனத்தில் மேவிநிற்கும் அபிராம
வேடிவேச்சி பாதபத்ம மீதுசெச்சை முடிதோய
ஆதரித்து வேளைபுக்க ஆறிரட்டி புயநேய
ஆதரத்தோ டாதரிக்க ஆனபுத்தி புகல்வாயே
காதும்உக்ர வீரபத்ர காளிவெட்க மகுடாமா
காசமுட்ட வீசிவிட்ட காலர்பத்தி இமையோரை
ஓதுவித்த நாதர்கற்க ஓதுவித்த முனிநாண
ஓரெழுத்தில் ஆறெழுத்தை ஓதுவித்த பெருமாளே. (உ)

அபகார நிந்தைபட் டுழலாதே
அறியாதவஞ்சரைக் குறியாதே
உபதேசமந்திரப் பொருளாலே
உனைநான் நினைந்தருட் பெறுவேனோ
இபமா முகன்றனக் கிளையோனே
இமவான் மடந்தைஉத் தமிபாலா
செபமாலை தந்தசற் குருநாதா
திருவாவினன்குடிப் பெருமாளே. (ந)

ஒருபொழுதும் இருசரணம் நேசத் தேவைத் துணரேனே
உனதுபழநிமலை யெனும் ஊரைச் சேவித்தறியேனே
பெருபுவியி லுயர்வரிய வாழ்வைத் தீரக் குறியேனே
பிறவியற நினைகுவனென் ஆசைப் பாடைத் தவிரேனோ
துரிதமிகு நிருதர்புர சூரைக் காரப் பெருமாளே
தொழுதவழி படுமடியர் காவற் காரப் பெருமாளே
விருதுகவி விதரணவி நோதக் காரப் பெருமாளே
விறன்மறவர் சிறுமிதிரு வேளைக் காரப் பெருமாளே. (ச)

சரணகம லாலயத்தை அரைநிமிஷ நேரமட்டில்
தவமுறைதி யானம் வைக்க அறியாத
சடகசட மூட மட்டி பவவினையி லேசனித்த
தமியன்மிடி யால்ம யக்கம் உறுவேனோ
கருணைபுரி யாதி ருப்ப தெனகுறையி வேளை செப்பு
கயிலைமலை நாதர் பெற்ற குமரோனே
கடகபுய மீதி ரத்ந மணியணிபொன் மாலை செச்சை
கமழுமண மார்க டப்பம் அணிவோனே
தருணமிதை யாமி குத்த கனமதுறு நீள் சவுக்ய
சகலசெல்வ யோக மிக்க பெருவாழ்வு
தகைமைசிவ ஞான முத்தி பரகதியும் நீகொ டுத்து
தவிபுரிய வேணு மெய்த்த வடிவேலா
அருணதள பாத பத்மம் அதுநிதமு மேது திக்க
அரியதமிழ் தான ளித்த மயில்வீரா
அதிசய மநேக முற்ற பழநிமலை மீது தித்த
அழகுதிரு வேர கத்தின் முருகோனே. (ரு)

திருப்புகழ், அருணகிரி நாதர்.

---

## 19. தினை விதைத்தவன் தினையை அறுப்பான்

ஒருவன் எள்ளை விதைத்தால் எள்ளை அறுப்பானே அன்றிக் கொள்ளை அறுக்கமாட்டான். தினையை விதைத்தவன் தினையை அறுப்பானே அன்றி நெல்லை அறுக்கமாட்டான். நெல் கமுகாய் விளையாது; கமுகு நெல்லாய் விளையாது. இது நாம் உலகத்திலே காணும் உண்மை. இஃது எக்காலத்தும் எவ்விடத்தும் மாறுவ

தில்லை. இதைப்போலவே நாம் ஒரு நற்செய்கையைச் செய்தால் அதற்கு நற்பயனே உண்டாகும்; தீய பயன் எப்பொழுதும் உண்டாக மாட்டாது. அங்ஙனமே நாம் ஒரு தீச்செயலைப் புரிந்தோமாயின் அதனால் தீய பயனே உண்டாகும். நாம் ஒருவனை அடித்தால் அதற்குப் பதிலாக அவன் நம்மை அடிப்பான்; ஒருவனை வைதால் அவனும் நம்மை வைவான்; ஒருவனைப் பகைத்தால் அவனும் நம்மைப் பகைப்பான். இங்ஙனமே நாம் ஒருவனிடம் அன்பு பாராட்டி, இன்சொல் கூறி, அவனுக்கு வேண்டும் உதவியைச் செய்தால், அவனும் நம்மிடம் அங்ஙனமே அன்பு பாராட்டி இனியனாக இருப்பான். இது மக்களிடத்திலே அன்றி நாய், குரங்கு, கிளி, பூவை முதலான எல்லா உயிர்களிடத்தும் காணப்படும் பொதுக் குணமாகும். இவ்வுண்மையினை நாம் எப்பொழுதும் மறவாமல் கடைப்பிடிக்க வேண்டும். இதைத்தான் 'தினை விதைத்தவன் தினையை அறுப்பான்; வினை விதைத்தவன் வினையை அறுப்பான்' என்னும் முதுமொழி விளக்குகின்றது.

நாம் செய்யும் செய்கைகளின் பயன் நம்மையே வந்து சேருகின்றன. ஒரு பந்தை எடுத்துச் சுவரிலே நாம் எறிந்தோமாயின் அது நம்மையே நோக்கி வருகிறது. இதுபோன்றே நம்

செய்கைகள் நம்மையே நோக்கி வருகின்றன. நமது செய்கைக்கு வினை என்று பெயர். கருமம் என்றாலும் அதுவே பொருள்; அது வடமொழி. நல்ல செயல்களை நல்வினை, புண்ணியம் என்றும் தீய செயல்களைத் தீவினை, பாவம் என்றும் கூறுகிறோம். நாம் செய்யும் புண்ணிய பாவங்களின் பயனை நாம் இப் பிறவியிலேயும் அடையலாம்; அன்றி மறு பிறவியிலும் அடையலாம்; ஆனால் அடைவது மட்டும் திண்ணம்.

ஒருவன் ஒரு நிலத்திலே காரை விதைத்தான்; மற்றொரு நிலத்திலே சிறுமணியை விதைத்தான்; புழைக்கடையிலே கீரையை விதைத்தான். இவையெல்லாம் ஒரே காலத்திலே விளையுமா? விளையா. கீரை சில நாட்களிலே முளைத்துப் பயிராகிவிடும்; கார் மூன்று மாதத்திலே விளைந்துவிடும்; சிறுமணியோ ஆறுமாதத்திற்குப் பின்பு பயிராகும். அதுபோலவே நாம் செய்யும் புண்ணிய பாவங்களும் அவ்வவற்றின் தன்மைக்கேற்ப இப்பிறப்பிலும் மறுபிறப்பிலும் பயனைத் தரும்.

நாம் அறம், மறம் என்னும் இவ்விரண்டனையும் நெஞ்சால் முன் நினைத்தும் வாயாற் பின் பேசியும் அதன்பின் உடம்பாற் செய்தும் வருகிறோம். நினைப்பே எல்லாவற்றிற்கும் முதற் காரணமாகும். அதனால் தீமையை நினைப்

பதும் பாவம்; நன்மையை நினைத்தலும் புண்ணியம். மனத்தால் செய்யும் நன்மை தீமைகட்கு மானசீகம் என்றும், வாயாற் செய்வனவற்றிற்கு வாசிகம் என்றும், உடம்பாற் செய்யுங் காரியங்கட்குக் காயிகம் என்றும் வடமொழிப் பெயர்கள் உண்டு.

நாம் மனத்தாற் செய்யும் தீவினைகள் ஆசை, கோபம் முதலாயின; வாக்கற் செய்யும் தீவினைகள் பொய், கோட்சொல்லல, கடுஞ்சொற் கூறல், பயனில்லாதன கூறல் முதலாயின; உடம்பாற் செய்யும் தீவினைகள் கொலை, களவு முதலாயின. நாம் மனத்தாற் செய்யும் புண்ணியம் எப்பொழுதும் பிற உயிர்கட்கு நன்மையே நினைத்தல்; வாயாற் செய்வது என்றும் யாரிடத்தும் இனிய மொழியே கூறுதல்; உடம்பாற் செய்வது பிறருக்கென்றே முயற்சி செய்தல். நாம் செய்யும் நன்மை தீமைகள் நம்மையே வந்து சேர்வது உறுதி யாதலால் நாம் எவ்வகையானும் நன்மையே செய்ய வேண்டும்; தீமையை அறவே ஒழிக்க வேண்டும்.

இனி, நாம் செய்த வினைகள் நம்மைத் தாமாகவே வந்து சேருமா? சேரமாட்டா. அவைகட்கு உயிர் இல்லை. அவைகளை நம்மிடம் கூட்டுவிக்கின்ற செம்பொருள் ஒன்று வேண்டும். அவர்தாம் நமது கடவுள். கடவுள் இல்லாவிட்

டால் நாமே அவ்வினைப் பயனை அடையவும் முடியாது. ஏனென்றால் நமக்கு ஆற்றல் இல்லை. ஒருவன் செய்த நல்வினையை மற்றொருவன் கவர்ந்துகொள்வான் ; தான் செய்த தீவினையை ஒருவனும் அடைய விரும்ப மாட்டான். ஆகை யால் இறைவனே அவர் அவர் செய்த நல்வினை தீவினைப் பயன்களை அவர் அவருக்கு ஏறுமலும் இறங்காமலும் ஊட்டுவிப்பார். இங்ஙனம் முறை யாக வினை தன் ப ய னை ஊட்டுவதனாலேயே அதற்கு ஊழ் என்று பெயர் உண்டாயிற்று. ஊழ் என்ற சொல்லுக்கு முறைமை என்று பொருள். நல் வினையை ஆகூழ் என்றும் தீவினையைப் போகூழ் என்றும் சொல்லுவர். (ஆகு+ஊழ்—ஆகூழ்) (போகு+ஊழ்—போகூழ்). கட்டப்பட் டிருந்த பசுக்கன்றுகள் பலவற்றையும் அவிழ்த்து மந்தையில் விட்டோமானால், அவைகள் ஒவ் வொன்றும் அதனதன் தாயைக் கண்டே சேரும். ஒரு கன்று வேறொரு தாய்ப் பசுவைச் சேர்வ தில்லை. அதுபோலவே வினைகளும் செய்த வனையே தவறாமல் நாடிச் செல்லும்படி கடவுள் அருள் செய்கின்றார். அவர் திருவருளை நாம் என்றும் மறவாமல் நன்மையே செய்து பேரின் பம் அடைவோமாக.

---

## 20. சிவகுரு

சிவபெருமான் திருக்குமாரராக அவதரித்த முருகவேள் இளம் பருவத்துக் குரிய பற்பல திருவிளையாடல்களைப் புரிந்து வெள்ளி மலையின்கண் வீற்றிருந்தனர். அப்பொழுது ஒரு நாள் வெண்டாமரை மலரிலே எழுந்தருளியிருக்கும் அயன் இந்திரன் முதலான அமரர்களோடும், கின்னரர், கிம்புருடர், சித்தர், வித்தியாதரர் முதலிய தேவ கணங்களுடனும் இறைவனை வணங்குதற்குக் கயிலாயவரையைச் சார்ந்தான். அஞ்ஞான்று செவ்வேள் வாய்தலிலே நின்றிருத்தலைக் கண்டும், அவரைச் சிறிதும் மதியாமற் பிரமன் இறுமாந்து சென்றனன். அதனைக் கண்ட குமரன், தனது உண்மை நிலையைக் கண்டு வைத்தும், இளையவனெனக் காணுதவன்போற் செல்லும் மலரோனுக்கு நல்லறிவுச் சுடர் கொளுத்தவும், அவ்வாற்ருன் எல்லா உலகங்களும் தனது இயல்பை அறியவும் திருவுளங் கொண்டு, பிரமனைத் தன்னிடம் வருவித்து, " நீ யாவன் ?" என்று வினவினுன் ; அவன் நடுநடுங்கி, " அடியேன் படைத்தற்ருெழில் புரியும் பிரமன்," என்றுரைத்தான். " அங்ஙனமாயின் பிரணவப் பொருளை அறிவாயோ ?" என்று அறுமுகப்பெருமான் அவனைக் கேட்டான். அவன், " பிரணவம் என்பது எல்லா மந்திரங்கட்கும் முதலாக உள்

ளது: அதினிடம் இருந்தே எல்லாச் சாத்திரங் களும் அருட்கலைகளும் தோன்றின; அதுவே இயற்கை ஒலி; அதுவே இயற்கை வடிவம்; அஃது இயற்கை ஒலி என்பது செவியைப் பொத் திப் பார்ப்போனால் தோன்றுவதனால் இனிது அறியலாம்; இயற்கை வடிவென்பது தண்ணீ ரிலே விட்டு எறியும் கல்லினால் உண்டாகும் வட்ட வடிவத்தினால் நன்கு உணரலாம்; அதுவே ஓங் காரம்; அதைப் பிரித்தால் அ, உ, ம் என மூவெழுத் துக்களாகும்," என்றிவ்வாறு நீளக் கூறத் தொ டங்கினான். அக்காலை முருகன், இடைமறுத்து, "போதும், போதும்; நிறுத்து; இக்கதையையோ நான் கேட்டேன்; இவையெல்லாம் யாருக்குத் தெரியாது; ஓங்காரத்தின் நுண்பொருள் இன்ன தெனக் கூறுவையோ?" என்றான். அவன் "அறி யேன்" எனக் கூறி அடங்கினான்.

பின்னர்க் கடம்பன் அயனை நோக்கி, "நீ உலகம் படைக்கும் அழகு மிக நன்று; இஃதறி யாத நீ என்ன செய்ய இயலும்?" எனக் கூறித் தனது திருக்கையை ஓச்சி அவன் தலையிலே ஒரு குட்டுக் குட்டி அவனைச் சிறையிடுவித்துத் தானே உலகத்தைப் படைத்துத் திருவிளையாட் டயர்வா னாயினன். இதனைக் கண்ட வானோர் அஞ்சிச் சிவ பெருமான்பாற் சென்று, நிகழ்ந்தவற்றை எடுத்து மொழிந்தனர். பெருமானும் மைந்தன் குறும்

யைக் கேட்டுத் தமது மருங்கிலே அமர்ந்திருந்த அம்பிகையைக் கடைக்கண்ணால் நோக்கிக் குறு நகை முகிழ்த்து, "நின் மைந்தன் செயலைப் பார்த்தாராய்," என்று கூறிவிட்டுத் தேவர்களைப் துப் பின்வருமாறு கூறினர்: "தேவர்களே, ஒவ்வொருவரும் அடக்கத்தைப் பொருளாகக் கொள்ளவேண்டும்; எத்துணை உயர்நிலையை அடைந்தாலும் செருக்கு அடைதல் ஆகாது; ஒருவரையும் இகழ்தல் கூடாது; அயன் தனது ஆணவத்தால் இக்கதியை அடைந்தான்; நாம் சென்று அவன் சிறையை மீட்போம், நீவிர் செல்க."

இங்ஙனம் கூறி அவரை விடுத்துக் குமரனிடம் சென்று வெகுண்டார் போன்று நோக்கி அயன் சிறையை விடுவித்தனர். அப்பாற் கண்ணுதற்கடவுள் தம் செல்வத் திருமகனைப் பார்த்து, "அறுமுக அமுதே, பிரணவத்தின் நுட்பத்தை நீ அறிவாயானல் எமக்குச் சொல்லுவாயாக," என்று வினவி யருளினர். அதனைச் செவியுற்ற கந்தன், "ஐயரே, அது மறைவாக ஓதற் பாலது; அன்றியும் தாம் மாணவராக இருக்க, நான் ஆசிரியனாக வீற்றிருந்து ஓதுதல் வேண்டும்," என்றான். சங்கரன் நகைத்து "அங்ஙனமே ஆகுக" என அதற் கொருப்பட்டான்.

பின்னர், சரவணபவன் தனித்ததோர் இடத்திலே சிவனார் மாணக்கனாக அமரத் தான் குரவனாக

எழுந்தருளிப் பிரணவத்தின் உயரியபொருளை அவர் மனங்குளிர உபதேசித் தருளினன். இறைவன் குழந்தை வேலனை விரைந்து அணைத்து, "கண்மணியே, நீ இதனை எங்ஙனம் அறிவாய்?" எனக் கேட்டார். அதற்குக் குகன், "தேவரீர் என் தாய்க்கு மறைவாக ஓதிய போது அருகிருந்து கேட்டறிந்தேன்," என்றான். நீலகண்டன் உள்ளம் உருகி அமரரை நோக்கி, "அமரர்காள், இச் சேய்க்கும் எமக்கும் வேற்றுமை இல்லை; யாமே அவன், அவனே யாம் என உணர்ந்து வழிபடுவீராக," என்றருள்செய்து பால சுப்பிரமணியனோடு கைலையங்கிரிக்குச் சென்றார். இதனால் முருகப்பிரானுக்குச் சிவகுரு என்னுந் திருநாமம் வழங்குவதாயிற்று. குருசாமி, குமாரசாமி, சாமிநாதன் முதலான பெயர்களும் இப் பொருளையே உடையன. சிலர் வேடிக்கையாகத் தந்தைக்கு உபதேசித்த காரணத்தாலே முருகனைத் தகப்பன் சாமி என்று கூறுவர்.

பாட்டு

ஏதேதோ எண்ணி இனையும் மடநெஞ்சே,
ஓதுவேன் கேளொன்று உண்மையாய்—மாதேவன்
நல்ல திருத்தணிகை நம்பெருமான் நம்மிடரை
வல்லே ஒழிப்பான் மகிழ்ந்து. (1)

எதுதுயர் வந்தாலும் எங்கல் மடநெஞ்சே,
மாது வளர்தணிகை மன்னவனே—கோதொழித்து
நம்மை இடர்கெடுத்து நாதனென் என்றுகொளும்
இம்மை மறுமை இனிது. (2)

அஞ்சாதே நெஞ்சே அழகு திருத்தணிகை
தஞ்சாகச் சேர்ந்த தருணமே—எஞ்சாத
தீரமொடு வீரம் திறமை பொருள்கல்வி
வாரமோ டெல்லாம் வரும். (3)

பாடும் வகையறியாய் பாவி பணிகூடாய்
நாடும் வழியறியாய் நன்றேயோ—நீடுகின்ற
அச்சமே கொண்டிங் கலேவாய்நீ பாழ்நெஞ்சே
துச்சமே செய்வதென் சொல்? (4)

பார்க்கும் அழகன்றேல் பைந்தமிழ் தேர்முருகன்
சீர்க்குந் திருவழகு செப்புவதோ—ஆர்க்கும்
இனியான் எளியான் இடர்கெடுக்கும் வள்ளல்
கனியான் சுவையானன் காண். (5)

மணி. திருநாவுக்கரசு முதலியார்.



PRINTED AT THE ROYAL PRINTING WORKS, MADRAS.